# நற்றிணையில் முதல் கரு உரிப்பொருள்கள் பயின்று வந்துள்ள முறை

அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**செ. நீதி**

பதிவு எண் : 2006421020

நெறியாளர்

முனைவர் **இரா. தாமோதரன்**

விரிவுரையாளர்

தமிழ்த்துறை






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவால் “ஏ” மதிப்புப் பெற்றது)

காரைக்குடி - 630 003


சூலை - 2007

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் இரா. தாமோதரன்
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி – 630 003.

நாள்: 30/7/07

"நற்றிணையில் முதல் கரு உரிப்பொருள்கள் பயின்று வந்துள்ள முறை" என்னும் தலைப்பில் செல்வி. செ.நீதி எழுதிய இவ்வாய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக 2006 – 2007 ஆம் கல்வியாண்டில் என் மேற்பார்வையின் கீழ்த் தன் முயற்சியால் எழுதப்பட்டது எனவும் இவ்வாய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்படவில்லை எனவும் சான்றளிக்கிறேன்.

மு. பாண்டி
தமிழ்த்துறைத் தலைவர்

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

இரா. தாமோதரன்
நெறியாளர்

முனைவர் இரா. தாமோதரன்
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.
செல்: 94426 28922

# ஆய்வாளர் உறுதிமொழி

செ.நீதி நாள்: 30/7/07

பதிவெண் 2006421020

ஆய்வியல் நிறைஞர்

அழகப்பா பல்கலைக்கழகம்

காரைக்குடி – 630 003.

**“ நற்றிணையில் முதல் கரு உரிப்பொருள்கள் பயின்று வந்துள்ள முறை”** என்னும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இரா. தாமோதரன்
நெறியாளர்

முனைவர் இரா. தாமோதரன்
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.
செல்: 94426 28922

செ.நீதி

செ. நீதி
ஆய்வாளர்

# நன்றியுரை

ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வை மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், ஒப்புதலளித்த தமிழ்த்துறைத் தலைவர் மு.பாண்டி அவர்களுக்கும் என் உள்ளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்விற்குத் தக்கதோர் வழிகாட்டியாக அமைந்து அறிவுரைகள் கூறி ஆய்வேடு செம்மையுற அமையப் பல்லாற்றானும் நல்லுதவி புரிந்து ஆற்றுப்படுத்திய எனது ஆய்வு நெறியாளர் முனைவர் இரா.தாமோதரன் அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்கு வேண்டிய உதவிகள் செய்து ஆக்கமும், ஊக்கமும் அளித்த பேராசிரியர்கள் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம் அவர்களுக்கும், விரிவுரையாளர்கள் மு.நடேசன், முனைவர் மு.சுதா அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னை வளர்த்து ஆளாக்கிய என் பெற்றோர் வை.செல்வராஜ், செ.காந்திமதி அவர்களுக்கும் எனது படிப்பிற்கும், முன்னேற்றத்திற்கும் காரணமாக அமைந்த என் சகோதரர் செ.பாலக்கண்ணன் அவர்களுக்கும் என் சகோதரி செ.செல்வி, செ.இலக்கியா அவர்களுக்கும் என் அகம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்விற்குப் பல்வகையில் உதவி புரிந்த என் தோழிகள் அஜந்தாமேரி, சி.மலர்விழி, வி.அன்னமரியாள், பி.ஆர்.நிர்மலா, செல்லநாச்சியார், காஞ்சனாதேவி ஆகியோர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டிற்குத் தக்கதோர் தட்டச்சு வடிவம் தந்த சரவணா கணினி அச்சகத்தாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேடு முழு வடிவம் பெறப் பலநிலைகளிலும் உதவிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

# பொருளடக்கம்


| வ.எண் | இயல் | தலைப்பு | பக்கஎண் |
|---|---|---|---|
| 1. | | முன்னுரை | 1 - 4 |
| 2. | முதல் | நற்றிணைக் குறிஞ்சித் திணைப்பாடல்களில் முதல் கரு உரிப்பொருள்கள் | 5 - 46 |
| 3. | இரண்டு | நற்றிணை முல்லைத் திணைப்பாடல்களில் முதல் கரு உரிப்பொருள்கள் | 47 - 58 |
| 4. | மூன்று | நற்றிணை மருதத் திணைப்பாடல்களில் முதல் கரு உரிப்பொருள்கள் | 59 - 70 |
| 5. | நான்கு | நற்றிணை நெய்தல் திணைப்பாடல்களில் முதல் கரு உரிப்பொருள்கள் | 71 - 95 |
| 6. | ஐந்து | நற்றிணைப் பாலைத் திணைப்பாடல்களில் முதல் கரு உரிப்பொருள்கள் | 96 - 130 |
| 7. | ஆறு | முதல், கரு, உரிப்பொருள்கள் ஐந்திணைகளின் ஒப்பீடு | 131 - 156 |
| 8. | | முடிவுரை | 157 - 160 |
| 9. | | துணைநூற்பட்டியல் | |
| 10. | | பின்னிணைப்பு | |

# உள்ளுறை

## இயல் - 1

### நற்றிணைக் குறிஞ்சித்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்


1.0 முன்னுரை
1.1 1 - ஆம் பாடல்
1.2 5 - ஆம் பாடல்
1.3 6 - ஆம் பாடல்
1.4 8 - ஆம் பாடல்
1.5 13 - ஆம் பாடல்
1.6 17 - ஆம் பாடல்
1.7 22 - ஆம் பாடல்
1.8 23 - ஆம் பாடல்
1.9 25 - ஆம் பாடல்
1.10 32 - ஆம் பாடல்
1.11 34 - ஆம் பாடல்
1.12 36 - ஆம் பாடல்
1.13 39 - ஆம் பாடல்
1.14 44 - ஆம் பாடல்
1.15 47 - ஆம் பாடல்
1.16 51 - ஆம் பாடல்
1.17 53 - ஆம் பாடல்
1.18 55 - ஆம் பாடல்
1.19 57 - ஆம் பாடல்
1.20 61 - ஆம் பாடல்
1.21 64 - ஆம் பாடல்
1.22 65 - ஆம் பாடல்
1.23. 68 - ஆம் பாடல்
1.24. 75 - ஆம் பாடல்
1.25. 77 - ஆம் பாடல்
1.26. 82 - ஆம் பாடல்

1.27. 83 - ஆம் பாடல்
1.28. 85 - ஆம் பாடல்
1.29. 88 - ஆம் பாடல்
1.30. 93 - ஆம் பாடல்
1.31. 95 - ஆம் பாடல்
1.32. 98 - ஆம் பாடல்

## இயல் - 2

## நற்றிணை முல்லைத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்

20. முன்னுரை
2.1. 21 - ஆம் பாடல்
2.2. 42 - ஆம் பாடல்
2.3. 59 - ஆம் பாடல்
2.4. 69 - ஆம் பாடல்
2.5. 81 - ஆம் பாடல்
2.6. 89 - ஆம் பாடல்
2.7. 97 - ஆம் பாடல்
2.8. 99 - ஆம் பாடல்

## இயல் - 3

## நற்றிணை மருதத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்

30. முன்னுரை
3.1. 20 - ஆம் பாடல்
3.2. 30 - ஆம் பாடல்
3.3. 40 - ஆம் பாடல்
3.4. 50 - ஆம் பாடல்
3.5. 60 - ஆம் பாடல்
3.6. 70 - ஆம் பாடல்
3.7. 80 - ஆம் பாடல்
3.8. 90 - ஆம் பாடல்
3.9. 100 - ஆம் பாடல்

## இயல் - 4

### நற்றிணை நெய்தல் திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்


4.0 முன்னுரை

4.1 4-ஆம் பாடல்

4.2 11-ஆம் பாடல்

4.3 15-ஆம் பாடல்

4.4 16-ஆம் பாடல்

4.5 19-ஆம் பாடல்

4.6 27-ஆம் பாடல்

4.7 31-ஆம் பாடல்

4.8 35-ஆம் பாடல்

4.9 38-ஆம் பாடல்

4.10 ~~14~~ 45-ஆம் பாடல்

4.11 49-ஆம் பாடல்

4.12 54-ஆம் பாடல்

4.13 58-ஆம் பாடல்

4.14 63-ஆம் பாடல்

4.15 67-ஆம் பாடல்

4.16 72-ஆம் பாடல்

4.17 74-ஆம் பாடல்

4.18 78-ஆம் பாடல்

4.19 87-ஆம் பாடல்

4.20 91-ஆம் பாடல்

4.21 94-ஆம் பாடல்

4.22 96-ஆம் பாடல்


## இயல் - 5

### நற்றிணைப் பாலைத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்.


5.0 முன்னுரை

5.1 2 - ஆம் பாடல்

5.2 3 - ஆம் பாடல்

5.3 7 - ஆம் பாடல்
5.4 9 - ஆம் பாடல்
5.5 10 - ஆம் பாடல்
5.6 12 - ஆம் பாடல்
5.7 14 - ஆம் பாடல்
5.8 18 - ஆம் பாடல்
5.9 24 - ஆம் பாடல்
5.10 26 - ஆம் பாடல்
5.11. 28 - ஆம் பாடல்
5.12. 29 - ஆம் பாடல்
5.13. 33 - ஆம் பாடல்
5.14. 37 - ஆம் பாடல்
5.15. 41 - ஆம் பாடல்
5.16. 43 - ஆம் பாடல்
5.17. 46 - ஆம் பாடல்
5.18. 48 - ஆம் பாடல்
5.19. 52 - ஆம் பாடல்
5.20. 56 - ஆம் பாடல்
5.21. 62 - ஆம் பாடல்
5.22. 66 - ஆம் பாடல்
5.23. 71 - ஆம் பாடல்
5.24. 73 - ஆம் பாடல்
5.25. 76 - ஆம் பாடல்
5.26. 79 - ஆம் பாடல்
5.27. 84 - ஆம் பாடல்
5.28. 86 - ஆம் பாடல்
5.29. 92 - ஆம் பாடல்

இயல் - 6

முதல் கரு உரிப்பொருள்கள் ; ஐந்திணைகளின் ஒப்பீடு

6.0 முன்னுரை
6.1 முதற்பொருள்

6.1.1. குறிஞ்சித்திணையில் நிலம் பயின்றுவந்துள்ள முறை
6.1.1.1. உவமைக்காகக் கூறப்பட்ட பிறதிணை நிலங்கள்
6.1.2. முல்லைத் திணையில் நிலம் பயின்று வந்துள்ள முறை
6.1.3. மருதத்திணையில் நிலம் பயின்றுவந்துள்ள முறை
6.1.3.1. உவமையாகப் பயின்று வந்த பிறதிணை நிலம்
6.1.4. நெய்தல் திணையின் நிலம் பயின்றுவந்துள்ள முறை
6.1.4.1. குறிஞ்சித்திணைமூலம் காட்சியைப் புலப்படுத்தல்
6.1.5. பாலைத்திணையில் பயின்றுவந்துள்ளமுறை
6.1.1. குறிஞ்சியில் பொழுது
6.1.2. முல்லையில் பொழுது
6.1.3. மருதத்தில் பொழுது
6.1.4. நெய்தலில் பொழுது
6.1.5. பாலையில் பொழுது
6.2. கருப்பொருள்
6.2.1.. விலங்கு
6.2.1.1, குறிஞ்சி முல்லையில் மட்டும் வருவன
6.2.1.2 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன
6.2.1.3. குறிஞ்சியில் மட்டும் வருவன.
5.2.1.4. முல்லை பாலையில் மட்டும் வருவன
6.2.1.5. முல்லை நெய்தலில் மட்டும் வருவன
6.2.1.6. முல்லையில் மட்டும் வருவன
6.2.1.7. மருதத்தில் மட்டும் வருவன
6.2.1.8. நெய்தலில் மட்டும் வருவன
6.2.2. திணைப்பாடல்களில் இடம்பெற்ற பறவைகள்
6.2.2.1. குறிஞ்சி மருதம் நெய்தல் பாலையில் மட்டும் வருவன
6.2.2.2. மருதம் நெய்தலில் மட்டும் வருவன
6.2.2.3. குறிஞ்சியில் மட்டும் வருவன
6.2.2.4. முல்லை பாலையில் மட்டும் வருவன
6.2.2.5. முல்லையில் மட்டும் வருவன
6.2.2.6. நெய்தலில் மட்டும் வருவன

6.2.2.7 பாலையில் மட்டும் வருவன

6.2.3. திணைப்பாடல்களில் இடம்பெற்ற மரங்கள்

6.2.3.1 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன

6.2.3.2 குறிஞ்சி நெய்தலில் மட்டும் வருவன

6.2.3.3 குறிஞ்சியில் மட்டும் வருவன

6.2.3.4 நெய்தல் பாலையில் மட்டும் வருவன

6.2.3.5 நெய்தலில் மட்டும் இடம் பெற்றவை

6.2.3.6 பாலையில் மட்டும் வருவன

6.2.4. திணைப்பாடல்களில் இடம்பெற்றுள்ள மலர்கள்

6.2.4.1 குறிஞ்சி முல்லை பாலையில் மட்டும் வருவன

6.2.4.2 குறிஞ்சி முல்லையில் மட்டும் வருவன

6.2.4.3 குறிஞ்சி மருதத்தில் மட்டும் வருவன

6.2.4.4 குறிஞ்சி நெய்தலில் மட்டும் வருவன

6.2.4.5 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன

6.2.4.6 குறிஞ்சியில் மட்டும் வருவன

6.2.4.7 முல்லையில் மட்டும் வருவன

6.2.4.8 நெய்தல் பாலையில் மட்டும் வருவன

6.2.4.9 நெய்தலில் மட்டும் வருவன

6.2.4.10. பாலையில் மட்டும் வருவன

6.3. உரிப்பொருள்கள்

6.3.1. குறிஞ்சியில் உரிப்பொருள்

6.3.2. முல்லையில் உரிப்பொருள்

6.3.3. மருதத்தில் உரிப்பொருள்

6.3.4. நெய்தலில் உரிப்பொருள்

6.3.5. பாலையில் உரிப்பொருள்

6.4 முடிவுரை

கருப்பொருள் அட்டவணைகள்

துணை நூற்பட்டியல்.

# முன்னுரை

அகமும், புறமும் கலந்ததே மக்கள் வாழ்க்கை எனப் பழந்தமிழர் கருதினர். அக வாழ்க்கையைக் கூடத்தமிழன் என்றும் தன்னல வாழ்க்கையாகக் கொள்ளவில்லை. தமிழர் அகமெனக் கூறியது வெறுந்தன்னல மன்று, தன்னலத்தில் முளைத்துத் துணைநலமாக முகிழ்த்துப் பிறர் நலமாக மலர்வது. 'அன்புடை நெஞ்சந்தாங்கலந்து, மக்களைப் பெற்றுச் சுற்றந்தழுவிப் பிறர் நலம் பேணிச் சிறந்தது பயிற்றலே' தமிழனது குறிக்கோள். பழந்தமிழர் வாழ்க்கை வாழ்வதற்கே என்று கருதினர். அதில் தனது உள்ளத்திற்கிடமுண்டு, தான் வாழும் நிலத்திற்கும் காலத்திற்குமிடமுண்டு, தன்னைச் சுற்றி வாழும் செடிகொடிகளுக்கும் உயிரினங்களுக்கும் அதில் இடமுண்டு. தான் வாழும் நிலத்தையோ நிகழும் பொழுதையோ, நிற்கும் செடியையோ, நில்லாவிலங்கையோ தன்னுடைய அகவாழ்க்கைக்குப் புறமாகக் கருதவில்லை. தன்னைச் சுற்றியுள்ள சூழ்ந்துள்ள நிலப்பொருளையும், இயங்கு பொருளையும் உள்ளத்துடன் இணைந்த வாழ்வையே, பிணைந்த வாழ்க்கை முறையையே பழந்தமிழன் 'திணை' என்று கூறினான். அதனால்தான் அகத்திணையில் முதல் கரு, உரிப்பொருள் என்று பாகுப்படுத்திக் காட்டினான். அக வாழ்க்கையில் முதல் பொருள், கருப்பொருள் உரிப்பொருள் என்னும் பாகுபாடு மிக நுண்ணியதாகும். முதலும், கருவும் ஆகிய பொருட்கள் இயற்கையையும் செயற்கையுமான சூழ்நிலையைக் குறிக்கின்றன. அச்சூழ்நிலையில் ஊடாடும் போது தொடர்புறும்போது மாறும் உள்ளப் பாங்கையே உரிப்பொருள் குறிக்கின்றது.

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறுந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை"

(-2)

என்று தொல்காப்பியர் வகுத்த முதல், கரு, உரிப்பொருளுக்குச் சிறந்த விளக்கத்தை, பி.எல்.சாமி அவர்கள் சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம் (26) என்ற நூலில் கூறியுள்ளார்.

“ஒரு காதல் நிகழ்ச்சியைக் கற்பனை செய்து பாடும்போது, அதற்கு உரிய நிலம் பொழுது பறவை, விலங்கு, மரம், பூ முதலிய இயற்கைப் பொருள்கள் ஆகியவற்றையும் அமைத்துப் பாடும் மரபு நெடுங்காலமாக இருந்து வந்தது. ஊர் ஊராக மக்கள் எழுதாமலே பாடிவந்த நாட்டுப் பாடல்களிலேயே அந்த மரபு இருந்துவந்தமையால் புலவர்கள் அந்த மரபுகளை அவ்வாறே கையாண்டு இலக்கியம் படைத்தனர்.” என்று மு.வரதராசன் அவர்கள் தமிழ் இலக்கிய வரலாறு (31) என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

“9 - 12 அடி யெல்லைப்பட்ட நற்றிணைத் தொகையில் முதல், கரு, உரி என்ற மூன்றும் பெரும்பாலும் தன்னொத்து விளங்குதலைக் காண்கிறோம்” என்று வ.சுப. மாணிக்கம் அவர்கள் தமிழ்க்காதல் (18.2002) என்ற நூலில் கூறியுள்ளார்.

மேற்குறிப்பிட்ட செய்திகள்படி முதல், கரு உரிப்பொருள்கள் அக இலக்கியங்களுக்கு இன்றியமையாதன என்பதை அறிந்து கொள்ளமுடிந்தது.

## ஆய்வு நோக்கம்

நற்றிணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயின்றுவந்துள்ளதை ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

நற்றிணையின் 400 பாடல்களில் ஆய்வுச் சுருக்கம் கருதி முதல் 100 பாடல்கள் மட்டும் இங்கு ஆராயப்படுகின்றன.

## முதன்மை ஆதாரம்

கதிர் மகாதேவன் அவர்களின் உரையுடன் அமைந்த நற்றிணை நூலே முதன்மை ஆதாரமாக அமைகின்றது.

## துணை ஆதாரங்கள்

இலக்கணம், சங்க இலக்கியம் நற்றிணைத்தொடர்பான நூல்கள் துணை ஆதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

தொல்காப்பிய இலக்கண வரையறைகளின் அடிப்படையில் நற்றிணைப் பாடல்கள் ஆராயப்பெறுகின்றன. இந்த ஆய்வு விளக்கமுறை ஆய்வாகவே அமைகின்றது.

## ஆய்வுத் திட்டம்

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களைக் கொண்டமைகிறது. அவை,

இயல் 1. நற்றிணைக் குறிஞ்சித்திணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்.

இவ்வியல் நற்றிணை - குறிஞ்சித்திணைக்குரிய 32 பாடல்களிலும் முதல் பொருளும், கருப்பொருளும் உரிப்பொருளும் பயின்றுவந்துள்ளதை ஆராய்கின்றது.

இயல்.2. நற்றிணை முல்லைத்திணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்.

இவ்வியல் முல்லைத்திணைக்குரிய 8 பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயின்றுவந்துள்ளதை ஆராய்கின்றது.

இயல்.3. நற்றிணை மருதத்திணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்

இவ்வியல் மருதத்திணைக்குரிய 9 பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயின்று வந்துள்ளதை ஆராய்கின்றது.

இயல்.4. நற்றிணை நெய்தல் திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்.

இவ்வியல் நெய்தல் திணைக்குரிய 22 பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயின்று வந்துள்ளதை ஆராய்கின்றது.

இயல்.5. நற்றிணைப் பாலைத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்.

இவ்வியல் பாலைத்திணைக்குரிய 29 பாடல்களில் காணப்படும் முதல்,கரு உரிப்பொருள்கள் பயின்றுவந்துள்ளதை ஆராய்கின்றது.

இயல் 6 முதல், கரு, உரிப்பொருள் ஐந்திணைகளின் ஒப்பீடு,

ஒன்று முதல் ஐந்துவரையிலான இயல்களில் விளக்கப்பெற்ற கருத்துகள் இங்கு ஒப்பிட்டு ஆராயப்பெறுகின்றன.

முடிவுரையில் ஆய்வில் கண்டறிந்த கருத்துக்கள் தொகுத்து அளிக்கப்பெற்றுள்ளன.

துணைநூற்பட்டியலில் ஆசிரியர் பெயர் அகர வரிசையில் நூல்கள் அளிக்கப்பெற்றுள்ளன. ஆய்வுத் தரவுகள் அட்டவணைகளாக்கப்பெற்று அளிக்கப்பெற்றுள்ளது.

இயல் - 1



# நற்றிணைக் குறிஞ்சித் திணைப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

இயல் - ஒன்று

# நற்றிணைக் குறிஞ்சித்திணைப் பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

## 1.0 முன்னுரை

ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற நற்றிணைப் பாடல்களில் 32 பாடல்கள் குறிஞ்சித்திணைக்கு உரியவை. இந்த 32 பாடல்களிலும் காணலாகும். முதல், முதல், கரு, உரிப்பொருள்களைக் கண்டறிவது இந்த இயலின் நோக்கம்.

இந்தக் கருத்துகள், வரையறைகளின் அடிப்படையில் நற்றிணைக் குறிஞ்சித் திணைப்பாடற் கருத்துக்கள் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றது. பாடல்களின் எண் வரிசை அடிப்படையில் கருத்துக்கள் விளக்கப்பெறுகின்றன.

## குறிஞ்சித் திணை

தொல்காப்பியர் இத்திணைக்கு முதற்பொருள், கருப் பொருள், உரிப்பொருள் மூன்றையும் தொல்காப்பியத்தில் கூறியுள்ளார். அவர் வகுத்துள்ள படியே சங்க இலக்கியங்கள் மூன்று பொருளையும் கொண்டு படைக்கப்பட்டுள்ளன. அம்மூன்று பொருள்களும் வருமாறு,

"சேயோன் மேய மைவரை உலகமும்"[1]

என்றும்

"குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்"[2]

"பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப"[3]

என்றும், குறிஞ்சிக்கு முதற்பொருள் வகுத்துள்ளார்.

"புணர்தல்................"[4]

என்று, இத்திணைக்கு உரிப்பொருள் கூறியுள்ளார். இப்புணர்தலை நாற்கவிராச நம்பி அகப்பொருளில் இரண்டாகக் கூறியுள்ளார். அவை,

"உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியும்
கள்ளப் புணாச்சியும் காதலர்க் குரிய"[5]

என்று கூறி அவ்விரண்டும் நிகழுங்காலத்தையும் கூறியுள்ளார்.

"பொருவிறந் தோற்குப் பெருமையும் உரனும்
நன்னுதற் கச்சமும் நாணும் மடனும்
மன்னிய குணங்க ளாதலின் முன்னம்
உள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்"[6]

என்றும்.

"காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற் குரித்தே"[7]

என்றும் கூறியுள்ளார்.

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப"[8]

என்பது கருப்பொருளுக்கு உரிய நூற்பா.

## 1.1 1 -ஆம் பாடல்

### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருள் இடம்பெறவில்லை.

### கருப்பொருள்

"தாமரைக் தண்தாது ஊதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன் போல"

இவ்வடிகளில் வண்டு தாமரையில் உள்ள தேனினை எடுத்து உயரிய சந்தன மரத்தில் கட்டியது போலத் தலைவன் உயர்ந்த பண்பினைக் கொண்டவன் என்பதை விளக்குவதற்காகப் புலவர் அந்நிலத்தில் உள்ள

தாமரை, தேன், வண்டு சந்தனமரம் ஆகிய கருப்பொருள்களைப் பயன்படுத்தியுள்ளார்.

**உரிப்பொருள்**

"என்றும் என்தோள் பிரிவு அறியலரே"

என்ற அடியில் தலைவர் உன் தோள்களைப் பிரியும் எண்ணம் உடையவர் அல்லர் எனும் கருத்து இடம்பெற்றுள்ளது. இவற்றைக் கொண்டு ஆராயும் போது தலைவன் தலைவியுடன் இருப்பதை அறிந்து கொள்ளமுடிவதால் புணர்தல் நிமித்தம் இப்பாடலுக்குரிய உரிப்பொருள் என்பதை அறியலாம்.

## 1.2 5 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நிலம் நீர் ஆரக் குன்றம் குழைப்ப"

இவ்வடியில் 'குன்றம்' என்ற சொல் பயின்றுவந்துள்ளது. குன்றம் மலையைக் குறிப்பதால் இதுவே இப்பாடலின் நிலமாகக் கருதப்படுகிறது.

"தெற்கு ஏர்பு இரங்கும் அற்சிரக்காலையும்
அரிதே காவலர் பிரிதல்..........."

இவ்வடிகளில், பிரிந்தோர் இரங்கும் முன்பனிக் காலத்தும் நின் காதலரைப் பிரிய மாட்டாய் என்பதற்காக முன்பனிக் காலத்தைக் கூறியுள்ளார். காலையில் பனிப்பெய்யும் காலம் முன்பனிக்காலம்.

"அரும்பனி யச்சிரம் தீர்க்கும்"[9]
"அரும்பனி அற்சிரம் வாராதோரே"[10]

என்ற அடிகளில் இருந்து அற்சிரம் என்பது முன்பனிக் காலத்தைக் குறிக்கும் என்பதை அறியலாம்.

**கருப்பொருள்**

"குறவர் கொன்றை................"

இவ்வடியில் குறவர் என்ற சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் தலைமக்கட் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

".............குறைக் கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரம் சுற்றுவன அகைப்ப"

என்ற அடிகளில், வெட்டிவிடப்பட்ட கொடிகள் மீண்டும் தழைத்துச் சந்தன மரத்தில் சுற்றின என்று கூறப்பட்டுள்ளது. இங்கு புலவர் சந்தனமரத்தை ஆரம் என்று குறிப்பிட்டுள்ளார். ஆக, சந்தனமரம் குறவர், சுனை ஆகியவை இப்பாடலில் பயின்றுவந்துள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"அரிதே காதலர் பிரிதல்"

என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து, தலைவன் தலைவியின் அருகில் இருப்பது அறிந்கொள்ளமுடிகிறது. எனவே இப்பாடலின் உரிப்பொருள் புணர்தல் நிமித்தம் எனலாம்.

## 1.3 6 - ஆம் பாடல்

**முதல் பொருள்**

"அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சியாகும்
வல்வில் ஓரி கானம் நாறி
இரும்பன் ஒலிவருங் கூந்தல்"

இவ்வடிகளில் பயின்றுவந்துள்ள அத்த, கானம் என்ற சொற்கள் காட்டைக் குறிக்கின்றன. வல்வில் ஓரியின் கானம் போன்று நறுமணம் உடையது தலைவியின் கரிய கூந்தல் என்பதற்காகக் காட்டை இப்பபாடலில் புலவர் கூறியிருக்கிறார். ஆகவே கானம் இப்பாடலின் நிலம் அல்ல எனலாம்.

**கருப்பொருள்**

"நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்
நார் உரித் தன்ன மதன் இல் மாமைக்
குவளை அன்ன ஏந்தெழில் மழைக்கண்"

இவ்வடிகளில் தலைவியின் கண்ணையும், நிறத்தையும் வர்ணிக்க ஆம்பல் மலரையும் குவளை மலரையும் உவமையாகக் கூறியுள்ளார்.

"அந்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சியாகும்"

இவ்வடிகளில், குமிழ மரங்களில் கனிகள் மான்களுக்கு உணவாகும் என்று கூறப்பட்டுள்ளது. எனவே குமிழமரம், மான், ஆம்பல், குவளை ஆகியவை இப்பாடலில் பயின்று வந்துள்ள கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"பெரும்பே துறுவள் யாம் வந்தனம் எனவே"

என்ற அடியிலிருந்து தலைவியைப் பார்க்கத் தலைவன் வந்திருக்கிறான் என்பது புலப்படுகிறது. யான் வந்துள்ளேன் என்று கூறினாள் தலைவி மகிழ்வாள் என்று கூறுவதிலிருந்து, புணர்தல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

## 1.4 8 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"..............................அகல்வயல்

...............................................

கண்போல் நெய்தல் போர்வில் பூக்கும்
திண்தேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெறுக இவள் ஈன்ற தாயே"

இவ்வடிகளில், வயலில் அரியப்பட்டு எடுத்துச் செல்லப்பட்ட கண்போன்ற நெய்தல், நெற்போரின் கண்ணே மலரும பொறையனது தொண்டி

நகர்போன்ற சிறப்பினை இவளது தாய் அடையவேண்டும் என்று கூறப்பட்டுள்ள திலிருந்து உவமையாக வயல் இப்பாடலில் பயின்றுவந்துள்ளது என்பதை அறியமுடிவதால், வயல் இப்பாடலின் நிலம் அல்ல என்பது புலப்படுகிறது.

**கருப்பொருள்**

"கண்போல் நெய்தல் போர்வில் பூக்கும்"

என்ற அடியில் வந்துள்ள நெய்தல், மரத்தைக் குறிப்பதால் இதுவே இப்பாடலின் கருப்பொருள் எனலாம்.

**உரிப்பொருள்**

"அல்குபடர் உழந்த அரிமதர் மழைக்கண்
பல்பூம் பகைத்தழை அடங்கும் அல்குல்
திருமணி புரையும் மேனி மடவோள்
யார்மகள் கொல் இவள்................."

இப்பாடலில் தலைவியின் அழகை வர்ணித்துத் தலைவன் இத்தகைய அழகுடைய இவளைப் பெற்ற தாய் தந்தை யாரோ? என்று கூறி அவர்களைப் பாராட்டுவதை இப்பாடலின் வழிஅறிந்துகொள்ள முடிகின்றது. இவற்றிலிருந்து தலைவன் தலைவிமீது காதல் கொண்டுள்ளதை அறியமுடிகிறது.

## 1.5 13 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"வேங்கை வீவுகும் ஓங்குமலைக் கட்சி"

என்ற அடியில் 'ஓங்கு மலை' என்று, மலை குறிப்பிடப்பட்டுள்ளதால், மலையே இப்பாடலில் குறிப்பிடப்பட்ட நிலம் குறித்த முதற்பொருளாகும். இவ்வடிவில் வந்துள்ள 'கட்சி' என்று சொல் காட்டைக் குறிக்கும். இவற்றிலிருந்து மலைப்பகுதியில் காடு இருந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது. மலையே நிலமாக இருந்தாலும் அம்மலையை

வளப்படுத்தும் மரங்கள் நிறைந்த காடு சிறுபான்மை இருக்கும் என்பதைப் பாடலின் வழி அறியமுடிகின்றது. கட்சி என்ற சொல் வேறு இலக்கியங்களில் பயின்றுவந்துள்ளது. அவை வருமாறு,

"கலவ மஞ்ஞை கட்சியுட் தளரினும்"[11]
"கட்சியுட் காரி கடிய"[12]

**கருப்பொருள்**

"ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த"

என்ற அடியில் வந்துள்ள 'மா' என்ற சொல் விலங்கைக் குறிக்கிறது. மா என்று மட்டும் கூறப்பட்டு அதன் பெயர் சுட்டவில்லை.

"வேங்கை வீயுகும்...................."

என்ற அடியில் வேங்கை மலர் உலைகளத்து அடிக்கும் இரும்பின் பொறி சிதறுதல் போல உதிர்ந்து கிடக்கிறது. என்று உவமையாக வர்ணித்துக் கூறியுள்ளார் புலவர்.

"மயில் அறிபு அறிவா மன்னோ
பயில் குரல் கவரும் பைம்புறக்கிளியே"

என்ற அடிகளில் மயிலும், கிளியும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆக மா, வேங்கை மலர், கிளி, மயில் இப்பாடலில் பயின்றுவந்துள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

மயில், கிளிகள் திணைக் கதிர்களைக் கொண்டு செல்வதை அறிந்திருந்தும் அறியா இருப்பதுபோல, நின் களவொழுக்கத்தை அறிந்தும் அறியாதவள் போல் இருக்கின்றேன் என்று தோழி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. எனவே புணர்தல் நிமித்தமே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

1.6 17 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நாள் மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து"

இவ்வடியில் குன்றத்தில் மழை பெய்தது என்று நிகழ்கால நிகழ்வைக் கூறுவதால் இப்பாடலில் குறிப்பிடப்பட்ட நிலம் மலை என்பது புலப்படுகின்றது.

"மால்கடல் திரையில் இழிதரும் அருவி"

என்ற அடியில் கடல் அலைபோல அருவியில் நீர் வீழ்ந்தது. என்று கூறப்பட்டுள்ளது. அருவியை வர்ணிப்பதற்காக இங்கும் கடலைக் கூறியிருக்கிறார். எனவே கடல் பகுதி இப்பாடலுக்குரிய நிலம் அல்ல என்பது புலப்படுகிறது.

"அகலிருங் கானத்து அல்கு அணி நோக்கித்"

இவ்வடியில் 'கானம்' என்ற சொல்லைப் புலவர் கூறியதற்குக் காரணம் குன்றமாக இருந்தாலும் அங்கும் மரம் செடி நிறைந்து காணப்படுவதால் கானம் என்று கூறியுள்ளார்.

"நாள் மழை தலைஇய............"

இவ்வடியில் நாள் என்ற சொல் பயின்று வந்துள்ளது. இச்சொல் பொழுதைக் குறிப்பதால் நாள் இப்பாடலில் குறிப்பிடப்பட்ட பொழுதாகும்.

நாளும், மலையும் இப்பாடலில் பயின்று வந்துள்ள முதற்பொருட்கள் ஆகும்.

**கருப்பொருள்**

"காந்தள் ஊதிய மணிநிறத் தும்பி
திந்தொடை நரம்பின் முரலும்
வான்தோய் வெற்பன் மார்பு அணங்கெனவே"

இவ்வடிகளில் காந்தள் மலரின் தேனை உண்ணும் வண்டு யாழைப்போல் இசையை எழுப்பும் நாட்டை உடைய வெற்பன் தன்னைத் துன்புறுத்தினான் என்று தலைவி குறிப்பிடுகிறாள். இவ்வடிகளில் காந்தள் மலர், தேன் வண்டு, வெற்பன், யாழ் ஆகியவை கருப்பொருளாகப் பயின்றுவந்துள்ளன.

"மால்கடல் திரையில் இழிதரும் அருவி"

எனும் அடியில் வந்துள்ள அருவி இப்பாடலில் பயின்றுவந்துள்ள நீர் குறித்த மற்றொரு கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"ஏந்தெழின் மழைக்கண் கலுழ்தலின் அன்னை
எவன்செய் தனையோநின் இலங்கு எயிறு உண்கென
மெல்லிய இனிய கூறலின் வல்விரைந்து
உரைக்கல் உய்ந் தனனே தோழி சாரற்
.........................................................................
.........................................................................
வான்தோய் வெற்பன் மார்பு அனங்கெனவே"

என்ற அடிகளில் தலைவி அழுததைப் பார்த்த அன்னை ஏன் அழுகிறாய் என்று கேட்க இக் குன்றத்தில் தான் தலைவனை சந்தித்தேன் என்று கூற நினைத்து மறைத்தேன் என்று தலைவி கூறுவதிலிருந்து களவு காலச் சந்துப்பு நிகழ்ந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

### 1.7 22ம் - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி"

இவ்வடியில் 'வரை' என்று வந்துள்ளது. வரை என்ற சொல் மலையைக் குறிப்பதால் மலையே இப்பாடலில் பயின்றுவந்துள்ள நிலத்தைக் குறிக்கும் முதற்பொருளாகும்.

"தை ஊண் இருக்கையின் தோன்றும் நாடன்"

இவ்வடியில் வந்துள்ள தை, தைமாதத்தைக் குறிக்கின்றது. தை மாதத்தின் காலம் முன்பனிக் காலமாதலால் இப்பாடலின் பொழுது முன்பனிக் காலம் எனலாம்.

"நள்ளென் யாமத்து...................."

என்ற அடியில் வந்துள்ள யாமம் ஒரு நாளில் நடைபெறும் பொழுதின் இரவைக் குறிக்கிறது. எனவே இப்பாடலில் வந்துள்ள பொழுது முன்பனிக்காலமும், யாமமும் ஆகும். இவையே இப்பாடலின் பொழுதைக் குறிக்கும் முதற்பொருளாகும்.

### கருப்பொருள்

"கொடிச்சி காக்கும் அடுக்கல் பைந்தினை"

இவ்வடியில் வந்துள்ள 'கொடிச்சி' என்ற சொல் தினைப் புனத்தைக் காக்கும் குறத்தியைக் குறிக்கும் மக்கட் பெயராகும்.

"முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி"

இவ்வடிகளில் மந்தி, கடுவன் என்ற சொற்களில் மந்தி என்பது பெண்குரங்கையும், கடுவன் என்பது ஆண்குரங்கையும் குறிக்கும் விலங்கின் பெயர்களாகும்.

"பீளொடு திரங்கிய நெல்லிற்கு"

என்ற அடியில் வந்துள்ள நெல், உணவுக்குப் பயன்பட்டிருக்கிறது. ஆக, இப்பாடலில் பயின்று வந்துள்ள கொடிச்சி, மந்தி, கடுவன், நெல் ஆகியவை கருப்பொருட்களாகும்.

### உரிப்பொருள்

".......... நாடன்
வந்தனன் வாழி தோழி"

இவ்வடிகளில் நாடன் வந்தனன் என்று தோழி கூறி தலைவியை மகிழ்விப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவன் வந்தனன் என்று கூறப்பட்டுள்ளதால், தலைவியைச் சந்தித்தல் அடுத்து நிகழும் என்பதை அறியலாம்.

## 1.8 23 - ஆம் பாடல்

### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை.

### கருப்பொருள்

"..........................நெய்தல்

தெள்நீர் மலரின் தொலைந்த"

என்ற அடிகளில் நெய்தல் மலர் தலைவியின் கண்களுக்கு உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே நெய்தல் மலரே இப்பாடலில் குறிப்பிடப்பட்ட கருப்பொருளாகும்.

### உரிப்பொருள்

இப்பாடலில் தோழி தலைவனிடம் தலைவியைப் பற்றிக் கூறி விரைவில் திருமணம் செய்துகொள்ள வற்புறுத்துவதிலிருந்து தலைவன் அண்மையில் இருப்பதும், களவுகாலச் சந்திப்பு நிகழ்வதும் புலப்படுகின்றன.

## 1.9 25 ஆம் பாடல்

### முதற்பொருள்

"வளமலை நாடன் நெருநல் நம்மொடு"

இவ்வடியில் வளமிக்க மலைநாட்டை உடைய தலைவன் என்று மலை பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளதால், மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

### கருப்பொருள்

"செவ்வரி இதழ சேண்நாறு நறவின்

நறுந்தாது ஆடிய தும்பி பசுங்கேழ்ப்"

இவ்வடிகளில் நறவம் பூவில் தாது ஆடிய வண்டு என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து, நறவம்பூ மலராகவும், வண்டு பறவையாகவும் பயின்றுவந்துள்ள கருப்பொருட்கள் என்பது நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது.

"..........கிளி கடிந்து அசைஇச்"

என்ற அடியில் கிளி பற்றிய செய்தி பயின்று வந்துள்ளதால் கிளியும் இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்
வளமலை நாடன் நெருநல் நம்மொடு
......................................................
சொல்லிடம் பெறாஅன் பெயர்ந்தனன் பெயர்ந்தது"

என்ற அடிகளில், நேற்று தலைவனைச் சந்திக்கும் போது அவன் கூறிய சொற்களைக் கேளாமல் இருந்ததால் நம்மிடம். சொல்லாமல் சென்றுவிட்டான் என்பதிலிருந்து, களவுக்காலச் சந்திப்பு நிகழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது.

**1.10 32 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
...........................................................................................
அம்மனை கிழவோன் நம் நயந்து என்றும்"

இவ்வடிகளில் மலை என்ற சொல் பயின்றுவந்துள்ளது மாயோனின் கரிய நிறம் போன்று மலை உள்ளது என்று மாயோனின் நிறத்தை மலைக்கு உவமையாகப் புலவர் கூறியுள்ளார். எனவே இப்பாடலின் வழி மலையே முதற்பொருள் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கருப்பொருள்**

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்"

இவ்வடியில் பயின்றுவந்துள்ள மாயோன் என்ற சொல் திருமாலைக் குறிக்கும். இது கடவுள் பெயராகிய கருப்பொருளாகும்.

" ................ வயங்குவெள் ளருவி"

என்ற அடியில் அருவி பற்றிக் கூறப்பட்டுள்ளதால் அருவி நீராகப் பயன்பட்டிருக்கிறது எனலாம். இது இப்பாடலின் 'நீர்' குறித்த கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"அம்மலை கிழவோன் நம்நயந்து என்றும்
வருந்தினன் என்பதோர் வாய்ச்சொல் தேறாய்
நீயும் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந்து அளவல் வேண்டும் மறுதரற்கு
அரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"

என்ற அடிகளில் தலைவன் மீது காதல் கொண்டு பிறகு அதை வெறுக்கும் தலைவியிடம் தோழி பெரியோர் ஆராய்ந்து நட்புக் கொள்வார்கள் நட்புக் கொண்டபின் ஆராய மாட்டார்கள் என்று பலவாறு கூறுவதிலிருந்து தலைவன் தலைவிக்கு இடையே களவுக் காலச் சந்திப்பு நிகழ்ந்திருக்கிறது என்பது புலப்படுகிறது.

## 1.11 34 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பெருவரை அடுக்கம் பொறப்பச் சூர்மகள்"

என்ற அடியில் வரை என்று வந்துள்ளதால் மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

"கார்நறுங் கடம்பின் கண்ணிசூடி"

இவ்வடியின் கார்காலத்தில் மலர்ந்து கடம்பின் என்று வந்துள்ளதால் கார்காலம் பொழுதாகக் கருதப்படுகின்றது.

**கருப்பொருள்**

" ................. கல்சுனை அடை இறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
கருதி ஒண்பூ உருகெடிக் கட்டி"

இவ்வடிகளில் மலையில் உள்ள சுனையில் மலர்ந்த பூக்களான காந்தள், குவளை மலர்களைச் சேர்த்துக் கட்டி என்பதிலிருந்து.சுனை நீர், காந்தள், குவளை மலர், கருப்பொருள்களாகப் பயின்றுவந்துள்ளன என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

"அருவி இன்னியத்து ஆடு நாடன்
..................................................................
கார்நறுங் கடம்பின் கண்ணிசூடி"

இவ்வடிகளில் அருவியின் இசையில் ஆடும் நாடன் என்றும் கடம்பின் மாலையைச் சூடிய வேலன் என்றும் வந்துள்ளாதால் அருவி நீர், கடம்பம் மலர் கருப்பொருள்களாகப் பயின்றுவந்துள்ளா இவ்வடியில் எனலாம். ஆக சுனைநீர், அருவிநீர், காந்தள், குவளை, கடம்பம்மலர், நாடன் ஆகியவை இப்பாடலில் இடம்பெற்றுள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"அருவி இன்னியத்து ஆடு நாடன்
மார்புதுர வந்த படர்மலி அருநோய்
..........................................................................
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்"

இவ்வடிகளில் தலைவனால் ஏற்பட்ட நோய் என்று குறிப்பிட்டுள்ளதிலிருந்து தலைவன் பிரிவினால் நோய் ஏற்பட்டது

என்பதை அறிந்துகொள்ளலாம். எனவே இப்பாடலின் உரிப்பொருள் பிரிதல் என்பதை அறியலாம்.

### 1.12 36 - ஆம் பாடல்

#### முதற்பொருள்

"கல்லக வெற்பன் ........................"

இவ்வடியில் வந்துள்ள 'கல்லக வெற்பன்' என்பது மலைநாட்டை உடைய தலைவன் என்பதாகும். இங்கு மலை என்று கூறாமல் கல் என்று புலவர் கூறியுள்ளார். இதன்வழி மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

" ...................... யாமத்து"

இவ்வடியில் யாமம் என்று வந்துள்ளதால் யாமம் இப்பாடலின் பொழுது என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

#### கருப்பொருள்

"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை"

என்ற இவ்வடியில் வந்துள்ள "ஏற்றை" என்பது ஆண்பாலைக்குறிக்கும் இதனையே தொல் காப்பியர்.

"ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப"[13]

என்று கூறியுள்ளார். புலி சிறிய காலை உடையதாக இருந்தாலும் வலிமையினால் பெரிய களிற்றையே தாக்கிப் பிடியைப் புலம்ப வைத்தது என்பதை,

"பூநுதல் இரும்பிடி புலம்பத் தாக்கித்
....................................... பெருங்களிறு அடுஉம்"

என்றார் புலவர்.

"தாழ் நீர் நனந்தலைக் ..........."

இவ்வடியில் வந்துள்ள தாழ்நீர் என்பது மலையிலிருந்து அருவி நீர் கீழே விழுவதைப் புலவர் கூறுகிறார் எனலாம். ஆக, ஆண்புலி, களிறு, பிடி, அருவி நீர் ஆகியவை இப்பாடலில் இடம்பெற்றுள்ள கருப்பொருட்கள் எனலாம்.

**உரிப்பொருள்**

"கல்லக வெற்பன் சொல்லின் தேறி
யாம் எம் நலனிழந்தனமே யாமத்து
அலர்வாய்ப் பெண்டிர் அம்பலொடு ஒன்றி"

இவ்வடிகள், தலைவியைக் காணவந்த தலைவனிடம் இவ்வூர் அலர் தூற்றுகிறது விரைவில் திருமணம் நிகழ்த்த வேண்டும் என்று தோழி கூறுவதாக அமைந்துள்ளதால், புணர்தல் நிமித்தமே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

**1.13 39 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை.

**கருப்பொருள்**

"புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப்பு ஏய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே ...................................................."

இவ்வடிகளில் தலைவியின் கண்கள், புலியைக் குத்திய யானையின் தந்தத்தில் படிந்திருந்த செல்விறக் கோடுகள் போல் இருந்தன என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து, இப்பாடலில் இடம்பெற்ற புலியும் யானையுமே கருப்பொருள்கள் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

"ஆண்டலை மதிலராகவும் முரசுகொண்டு"

இவ்வடியில் இடம்பெற்றுள்ள 'முரசு' பறையைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"சொல்லின் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்"

இவ்வடிகளில் தலைவன் தலைவியிடம் நான் சொல்ல நீ எதிர் சொல் சொல்லாமல் நாணி இருக்கிறாயே என்று கூறுவதன் மூலம் இருவரும் சந்தித்து உரையாடிக் கொண்டிருக்கின்றனர் என்பது அறிந்து கொள்ள முடிகின்றது.

" ....................................... சொல்வழிப் படுத்தல்"[14]

என்ற நூற்பாவிற்கு ஏற்ப அமைந்துள்ளது. இவற்றின் வழி இயற்கை புணர்ச்சி, இவற்றின் உரிப்பொருள் எனலாம்.

### 1.14 44 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நன்மலை நாடன் காதல் மகளே"

இவ்வடியில் மலைநாடனின் மகள் என்று வந்துள்ளதால் மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

**கருப்பொருள்**

"பொருளில் ஆயமோடு அமருவி ஆடி"

என்ற அடியில் அருவி நீராடிய தலைவி என்று குறிப்பிடுவதால் அருவி இப்பாடலின் நீராகப் பயன்பட்டிருக்கின்றது

"நீடு இலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்
கொழுங்குரல் கோடல் கண்ணிச் செழும்பல"

இவ்வடிகளில் தினை பற்றியும், கோடற்பூ பற்றியும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. இதற்கு அடுத்த அடியில்,

"பல்கிளை குறவர் ..................................
குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய"

என்று மலை நிலத்தில் வாழக்கூடிய குறவர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது இது மக்கட்பெயரைக் குறிக்கும், இவ்வடியில் 'குடம்' போன்ற காயை உடைய ஆசினி மரத்தைப் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது எனவே அருவி நீர், தினை, கோடற்பூ, குறவர், பலாமரம் ஆகியவை இப்பாடலில் இடம்பெற்றுள்ள கருப்பொருள்கள் ஆகும்.

**உரிப்பொருள்**

"குறியா நோக்கமொடு முறுவல் நல்கி
மனைவியின் பெயர்ந்த காலை நினைஇய
நினக்கோ அறியுநள் நெஞ்சே ........................
..................................................................................
நன்மலை நாடன் காதல் மகளே"

என்ற இவ்வடிகளில், தலைவன் இற்செறிக்கப்பட்ட தலைவியை நினைத்துத் தன் நெஞ்சிடம், தலைவியை இனி எப்போது காண்பேன் என்று வருந்தி தன் நெஞ்சிடம் சொல்வதிலிருந்து இதற்கு முன் களவுக்காலப் புணர்ச்சி நிகழ்ந்துள்ளது என்பதை அறியலாம்.

## 1.15 47 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"கானக நாடற்கு ..............."

என்ற அடியில் கானக என்று கூறியுள்ளார். மலைப் பகுதியாக இருந்தாலும் காடு அப்பகுதியில் இருந்திருக்கும் என்பதை இவ்வடியின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. முருகன் மலையில் வாழக் கூடியவர். அவரைப் பற்றி இப்பாடலில் செய்தி இடம்பெற்றுள்ளதால் காடு இப்பாடலின் நிலம் அல்ல என்பதையும், மலையே இப்பாடலின் நிலம் என்பதையும் அறியமுடிகின்றது.

**கருப்பொருள்**

"பெருங்களிறு உழுவை அட்டென இரும்பிடி
உயங்கு பிணி வருத்த மொடு இரங்கல் செல்லாது"

இவ்வடிகளில் களிற்றைப் புலிகொன்றதால் பெண்யானை வருந்தியது என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து யானையும் புலியும் இப்பாடலின் விலங்குகள் என்பதை அறியாலம். இவ்வடியில் வந்துள்ள உழுவை என்ற சொல் புலியைக் குறிக்கும்.

"அணங்கு ..........................................
......................................................................
அன்னை அயரும் முருகு நின்"

இவ்வடிகளில் 'அணங்கு' என்ற சொல் கடவுளைக் குறிப்பதாகும். அக்கடவுளின் பெயரை இறுதி அடியின் முந்திய அடியில் 'முருகன்' என்று கூறியுள்ளதால் முருகனே இப்பாடலின் தெய்வத்தைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"காகை நாடற்கு இதுவென யான அது
கூறின் எவனோ தோழி ................................
..........................................................................................
பொன்நேர் பசலைக்கு உதவாமாறே"

இவ்வடிகளில், தலைவன் மீது ஏற்பட்ட காதலால் உன் உடலில் பசலை ஏற்பட்டுள்ளது. இதை அறியாத அன்னை வெறியாட்டு நிகழ்த்துகிறாள். இதைத் தலைவனிடம் கூறுவோம் என்று தோழி கூறுவதிலிருந்து தலைவன் அண்மையில் இருக்கிறான் என்பது புலப்படுவதால், தலைவனைச் சந்திப்பதற்கு வாய்ப்பு உண்டு என்பதை அறியலாம்.

## 1.16 51 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"ஓங்குவரை மிளிர வாட்டி ......................
........................................ மலைகிழ வோங்கே"

இவ்வடிகளில் வரை, மலை என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

" ..................................................

.................. விடரகம் சிலம்பப் பாம்பு உடன்று

பெயலானதே வானம் பெயலொடு"

இவ்வடிகளில் வானம் இடி இடித்து மழை பெய்தது என்றதிலிருந்து பெரும்பான்மை கார்காலத்தில் மழை பெய்யும் என்பதால் கார்காலமே இப்பாடலின் முதற்பொருள் குறித்தபொழுதாகும்.

***கருப்பொருள்***

"காம்புடை விடரகம் சிலம்ப ...........

..........................................................................

........................................ களிறு

பேதை ஆசினி ஒசித்த

வீதா வேங்கைய மலைகிழவோற்கே"

என்ற இவ்வடிகளில் யானை ஆசினிப் பூவை உதிர்த்து வேங்கை மரத்தில் நிற்கிறது என்று கூறப்பட்டுள்ளது. ஆசினி என்பது "பலா வகையின் ஒன்று"[15] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. காம்பு என்பது மூங்கில் மரத்தைக் குறிக்கும். எனவே இப்பாடலில் மூங்கில் மரம், ஆசினிமரம், வேங்கைமரம் ஆகியவை கருப்பொருள்களாக இடம் பெற்றுள்ளன எனலாம்.

" ............................................. பாம்பு உடன்று

ஓங்குவரை மிளிர வாட்டி ........................

..................................................................................

.......................... நுதலகொல் களிறு"

இவ்வடிகளில் பாம்பு, களிறு பற்றிக் கூறப்பட்டுள்ளதால் இவையும் இப்பாடலில் பயின்றுவந்துள்ள விலங்குக் கருப்பொருட்கள் ஆகும்.

"பின்னுவிடு முச்சி அளிப்பா னாதே
பெருந்தண் குளவி குழைத்து பாவடி"

இவ்வடிகளில், முச்சி, குளவி என்ற இரண்டு மலர்கள் கூறப்பட்டுள்ளன. முச்சி காந்தள் பூவைக் குறிக்கும், இவையே இப்பாடலில்பயின்று வந்துள்ள கருப்பொருட்கள் ஆகும்.

**உரிப்பொருள்**

"யாங்குச்செய் வாம் கொல்? தோழி ..................
பெயலானாதே வானம் பெயலொடு
மின்னுநிமிர்த் தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி அளிப்பா னாதே
........................................................................
வீதா வேங்கை மலைகிழ வோற்கே"

இவ்வடிகளில், தலைவன் வரும் வழி மழை பெய்து யானை,பாம்பு போன்ற விலங்குகள் நிறைந்து காணப்படுவதால், தலைவன் வரும் அவ்வழியை நினைத்து வருந்தினேன்.

இதை அறியாத அன்னை வெறியாட்டு நிகழ்த்துகிறாள் என்று தலைவி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளதிலிருந்து தலைவனுக்கும், தலைவிக்கும் களவு காலச் சந்திப்பு நிகழ்ந்திருக்கிறது. என்பதை அறியமுடிகின்றது.

**1.17 53 - ஆம் பாடல்**

**முதற் பொருள்**

"வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்"

என்ற அடியில் மலைபற்றிக் கூறப்பட்டுள்ளது. எனவே மலையே இப்பாடலின் முதற்பொருள் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கருப்பொருள்**

" ............................ கானக் கல்யாற்று
முளியிலை கழித்தன ......................"

என்ற அடிகளில் கானக் கல்யாற்று என்று கூறப்பட்டுள்ளது இது காட்டாற்றைக் குறிக்கும். அவ்வாற்றில் சருகுகள் ஓடும் என்பதிலிருந்து ஆற்றைச் சுற்றி நிறைய மரங்கள் இருந்துள்ளன என்பதை அறியலாம். இங்குக் குறிப்பிடப்பட்ட காட்டாறு இப்பாடலின் நீர் குறித்த கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"அறிந்தனள் கொல்லோ? அருளினன் கொல்லோ?
எவன்கொல் தோழி அன்னை கண்ணியது"

என்ற அடிகளில், நின் அன்னை அறிந்தனள் கொல்லோ என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து தலைவன் தலைவி காதல் கொண்டுள்ளனர் என்பதையும், களவுக்காலச் சந்திப்பு நிகழ்ந்திருக்கிறது என்பதையும் அறிந்துகொள்ளமுடிகின்றன.

## 1.18 55 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"ஓங்குமலை நாட ஒழிக நின் வாய்மை"

என்ற அடியில் உயர்ந்த மலையை உடைய நாடனே என்று மலை பற்றிக் கூறப்பட்டுள்ளதால் மலையே இப்பாடலின் நிலமாகும்.

" ........................ இரவின் வந்து இவள்"

என்ற அடியில் இரவுப்பொழுது பற்றிக் கூறப்பட்டுள்ளதால் இரவே இப்பாடலின் பொழுது எனலாம்.

**கருப்பொருள்**

"காம்புதலை மணந்த .............................
.....................................................................
சாந்த ஞெகிழி காட்டி ................"

இவ்வடிகளில், காம்பு, சாந்த ஞெகிழி என்பன வந்துள்ளன. இவற்றில் வந்துள்ள காம்பு மூங்கில் மரத்தையும், சாந்த ஞெகிழி, சந்தனக்

காட்டையும் குறிப்பதால் சந்தன மரம் இருந்துள்ளது அறியமுடிகின்றது. எனவே மூங்கில் மரமும், சந்தன மரமும் இப்பாடலில் இடம்பெற்றுள்ள மரங்களாகும்.

"ஓங்குமலை நாட .................."

என்ற அடியில் நாடன் என்று வந்துள்ளதால் இவை தலைமகள் ? பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

"அறுகால் பறவை................"

என்ற அடியில் ஆறுகால்களை உடைய பறவையான வண்டு இடம்பெற்றுள்ளது.

***உரிப்பொருள்***

"ஓங்குமலை நாட ஒழிக நின் வாய்மை
..........................................................................
....................... இரவின் வந்து இவன்
பொறிகிளர் ஆகம் புல்லத் தோள் சேர்ப்பு"

என்ற இவ்வடிகளின் மூலம் இரவு குறியில் தலைவன் வந்து பார்த்துச் செல்கிறான் என்பது அறியப்படுவதால் புணர்தல் நிகழ்ந்திருக்கலாம், ஆகவே இப்பாடலின் உரிப்பொருள் புணர்தல் நிமித்தம் எனலாம்.

**1.19 57 - ஆம் பாடல்**

***முதற்பொருள்***

"மாமலை நாடன் மருட்கை உடைத்தே"

என்ற அடியில் மலை இடம்பெற்றுள்ளதால் மலை இப்பாடலின் நிலம் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

***கருப்பொருள்***

"தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்
குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்

துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி

......................................................................

வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்

கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்"

என்ற இவ்வடிகளில், சிங்கம் முதலிய விலங்குகளை உடைய மலையில், வேங்கை மரத்தின் கீழ் பசு உறங்க இதைக் கண்ட மந்தி பசுவின் மடியிலிரந்து பால் கறந்து தன் குட்டிக்குக் கொடுக்கும் என்று பாடலில் காட்சி சித்திரிக்கப்பெற்றுள்ளது. இவற்றிலிருந்து சிங்கம், பசு, மந்தி, வேங்கை மரம் கருப்பொருள்கள் என்பதை அறியமுடிகின்றது. 'நாடன்' என்று தலைமகன் பெயரும் இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

**உரிப்பொருள்**

"மாமலை நாட மருட்கை உடைத்தே

செங்கோல் கொடுங்குரல் சிறுதினை வியன்புனம்

கொய்பதம் குறுகும் காலை எம்

மையீர் ஒதி மாண்நலந் தொலைவே"

இவ்வடிகளில் தலைனிடம் தோழி தினைமுற்றிய தால் தலைவி தினைப்புனம் காக்க வரமாட்டாள் என்று கூறுவதிலிருந்து தலைவனும் தலைவியும் முன்பு தினைப்புனத்தில் சந்தித்திருக்கின்றனர் என்பதை அறிந்துகொள்ளமுடிவதால் புணர்தல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 1.20 61 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"படுமழை பொழிந்த பாறை மருங்கிய"

என்ற அடியில் பாறை பயின்று வந்துள்ளதால் மலை இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

" ........................ அல்கல்

வேணவா நலிய வெய்ய உயிரா"

இவ்வடியில் வந்துள்ள அலகல் என்பது இரவைக் குறிக்கும் சொல்லாததால் இதுவே இப்பாடலின் பொழுது எனலாம்.

**கருப்பொருள்**

"சிரல்வாய் உற்ற தளவின் பரல் அவல்"

இவ்வடியில் பயின்று வந்துள்ள தளவு என்பது முல்லை மலரைக் குறிக்கும் என்பதை

"தளவம் - செம்முல்லைப்பூ"[16]

என்ற சான்றின் மூலம் அறியலாம். எனவே முல்லை மலரே இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"கேளாய் எல்லதோழி அல்கல்

.........................................................

ஏமான் பிணையின் வருந்தினே னாகத்

துயர்மருங்கு அறிந்தனள் போல் அன்னை

துஞ்சாயோ என குறுமகள் என்றலின்

சொல்வெளிப் படாமை மெல்லவென் நெஞ்சம்

...................................................................

கான்கெழு நாடன் படர்ந்தோர்க்கும்

கண்ணும் படுமோ என்றிசின் யானே"

இவ்வடிகளின் வழி இரவில் தூங்காமல் தலைவனையே நினைத்திருக்கிறாள் என்பதை அறியமுடிவதால் தலைவி தலைவன் மீது கொண்ட அன்பு புலப்படுகிறது.

## 1.21 64 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"மரல்றார் ஒடுக்கை மலையுறை குறவர்"

இவ்வடியில் மலை என்று வந்துள்ளதால் மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

**கருப்பொருள்**

"மரல்நார் உடுக்கை மலையுறை குறவர்
அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்
வறன் உற்று ஆரம் முருக்கிப் .................. "

இவ்வடிகளில் மலைவாழ் குறவர், தமது அறியாமையாலே சந்தன மரத்தின் மேற்பட்டையை உரித்தனர் என்ற கருத்தின் மூலம் குறவர் மக்கட்பெயராகவும் சந்தன மரம், மரமாகவும் பயின்றுவந்துள்ள கருப்பொருட்கள் ஆகும்.

**உரிப்பொருள்**

" ...................... இனி அவர்
வரினும் நோய் மருந்தல்லர் வாராது
அவணர் ஆகுக காதலர் இவண்நம்"

என்ற இவ்வடிகளில் தலைவரைப் பிரிந்ததால் என் உயிர் போகும் நிலையில் உள்ளது. அதனால் தூது சொல்லச் செல்லவேண்டாம். அவர் வரவேண்டாம் என்பதிலிருந்து தலைவி தலைவனை விட்டுப் பிரித்திருக்கிறாள் என்பது புலப்படுவதால் பிரிதல் நிமித்தமே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 1.22 65 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பெருமலை நாடனை ................"

இவ்வடியில் மலை இடம்பெற்றுள்ளது. எனவே மலையே இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருள் எனலாம்.

**கருப்பொருள்**

"................ விட்டுக்கரைக் கான்யாற்றுக்
கலங்கும் பாசி நீர் அலைக் கலாவ
ஒளிறுவெள் அருவி .................... "

இவ்வடிகளில் கான்யாறு, அருவி என்று வந்துள்ளதால் இவையே இப்பாடலின் நீர் குறித்த கருப்பொருளாகும்.

"புலிபொடு பொருது புண்கூர் யானை
நற்கோடு நயந்த அன்பின் கானவர்"

இவ்வடிகளில் புலியுடன் சண்டை போட்ட யானையின் மீது புண்பட்டிருந்தது. அப்புண்ணில் கானவர் அம்பு எய்து கொன்றனர் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து புலி, யானை, வேட்டைத் தொழில் ஆகியவை கருப்பொருட்கள் என்பதை அறியமுடிகின்றது.

**உரிப்பொருள்**

"பெருமலை நாடனை வரூஉம் என்றோளே"

என்ற அடியில், தலைவன் வருவான் என்பதிலிருந்து தலைவன் தலைவி பிரிந்திருக்கின்றனர் என்பது புலப்படுவதால் பிரிதலே இப்பாடலின் உரிப்பொருளாகும்.

## 1.23 68 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

" ................ கோடு உயர் குன்றே"

இவ்வடியில் குன்றம் என்று வந்துள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் என்பதை அறியமுடிகின்றது.

" ................................................................ மின்னி
ஆடுமழை இறுத்தன்று................................"

இவ்வடிகளில் மழை பெய்தல் பற்றிக் கூறப்பட்டுள்ளதால் பொழுது கார்காலம் என்பதை அறியலாம்.

குறிப்பிடப்பட்ட பொழுதாகும்.

**கருப்பொருள்**

" ................. நறுமலர் உந்திப்
பொங்கிவரு புதுநீர் .................... "

என்ற அடியில் மலரும், நீரும் கருப்பொருளாகப் பயின்றுவந்துள்ளன.

**உரிப்பொருள்**

"விளையா டாயமொடு ஓரை சூடாது
இளையோர் இவ்விடத்து இற்செறித்திருத்தல்
அறனும் அன்றே .......................... "

இவ்வடிகளின் வழி தலைவி தலைவனின் களவுக்காலச் சந்திப்பை அறிந்ததனால் தான், அன்னை தலைவியை இற்செறித்திருக்கிறாள் என்பது புலப்படுகிறது. இவ் இற்செறித்தல் களவுப் புணர்ச்சியின் அடுத்த நிலை என்பதை அறியலாம்.

## 1.24 75 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"கொடுவிடில் கானவன் .............."

இவ்வடியில் கானவன் என்று வந்துள்ளதால் காடு இப்பாடலின் நிலம் என்று கருதக் கூடாது. கானவன் பன்றியை அம்பினால் கொன்று, அவ் அம்பினை உடலிலிருந்து எடுக்கும் போது, அவ்அம்பின் நுனியில் குருதி படிந்திருந்தது போன்ற கண்களை உடைய தலைவி என்று உவமைப்படுத்த இக்கானவன் என்ற சொல்லைக் கூறியிருக்கிறார். காடு உவமைக்காகவே கூறியுள்ளார் ஆதலால் காடு இப்பாடலின் நிலம் அல்ல என்பதை அறியமுடிகின்றது.

**கருப்பொருள்**

"பாம்பு உயிர் அணங்கி யாங்கும் ஈங்குஇது

................................................................................

கொடுவில் கானவன் கோட்டுமா ......................... "

இவ்வடிகளில் பாம்பும், கோட்டு என்று பன்றியையும் கூறியுள்ளார். எனவே பாம்பும் பன்றியுமே இப்பாடலின் விலங்காக வந்துள்ள கருப்பொருள்களாகும்.

**உரிப்பொருள்**

" .................... குறுமமகள் நகாஅது

உரைமதி .............................

உறா நோக்கம் உற்று என்

பைதல் நெஞ்சம் உய்யு மாறே"

இவ்வடிகளின் வழி, தலைவன் தன் காதலைத் தலைவியிடம் கூறு என்று தோழியிடம் கூறுவதன் மூலம், தலைவன் மட்டும் தலைவியிடம் காதல் கொண்டுள்ளது புலப்படுகிறது.

## 1.25 77 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"மலைமா ஊர்ந்து ................................ "

என்ற அடியில் மலை என்று வந்துள்ளதால் மலையே இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

**கருப்பொருள்**

"மலைமா ஊர்ந்து ......................."

இவ்வடியில் மலைமா என்றது மலைபோன்ற உருவம் உடைய யானையை ஆகும். எனவே யானை இப்பாடலின் விலங்காகும்.

"....................... பலவின்

களையுடை மூன்றில் ...................."

என்ற அடிகளில் பலாவின் சுளைகள் என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் பலாமரம் இந்நிலத்தில் இருந்துள்ளது என்பதை அறியலாம்.

"ஒலிவெள் அருவி ..................."

என்ற அடியில் அருவி பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதால் அருவி நீராகப் பயன்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

"குவளை உண்கண் ........................."

என்ற அடியில் குவளை மலர் போன்ற கண்ணினை உடையவள் என்பதிலிருந்து குவளை மலராக இருந்ததை அறியலாம்.

***உரிப்பொருள்***

"திதலை அல்கல் குறுமகள்
குவளை உண்கண் மகிழ்மட நோக்கே"

இவ்வடிகளின் வழி தலைவியின் நோக்கு மகிழ்வை ஏற்படுத்தியது என்று தலைவன் கூறுவதாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. எனவே இப்பாடல் காதலின் முதல்நிலையை அறிவுறுத்தும் பாடல் எனலாம்.

## 1.26 82 ஆம் பாடல்

***முதற்பொருள்***

முதற்பொருள் பற்றிய செய்திகள் இப்பாடலில் இடம்பெறவில்லை.

***கருப்பொருள்***

"வேய்வனப்பு உற்ற தோளை நீயே
என்னுள் வருதியோ நல்நடைக் கொடிச்சி"

இவ்வடிகளில் வேய் போன்ற தோளும், நல்நடையும் பொருந்திய கொடிச்சி என்று தலைவன் கூறுவதாக அமைந்துள்ளது. இவற்றிலிருந்து, மூங்கில் மரமாகவும், கொடிச்சி தலைமகள் பெயராகவும் வந்துள்ளதை அறியமுடிகின்றது.

"முருகு புணர்ந்து இயன்ற வள்ளி போல நின்"

என்ற அடியில் முருகனை மணந்த வள்ளி போல உருவினை உடையவள் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து, முருகன் இப்பாடலின் கடவுள் என்பதை அறியலாம்.

"................நாகப் போக்கருங் கவலைச்
சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
கோள்நாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்குஞ் சிறுகுடியானே"

இவ்வடிகளில் பன்றியைக் கொன்ற அந்நாயை விலக்கி, அப்பன்றியின் இறைச்சியை எடுத்துவரும் குடியில் பிறந்தவளே என்று கூறப்பட்டுள்ளது. இவற்றில் 'பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்' என்ற அடியில் வந்துள்ள 'ஒருத்தல்' ஆண்பாலைக் குறிக்கும் என்று தொல்காப்பியம் கூறுகிறது.

"வார்கோட்டியானையும் பன்றியும் அன்ன"[17]

எனவே, இப்பாடலில் ஆண்பன்றியும், நாயும் விலங்காக வந்துள்ளன என்பதை அறியமுடிகின்றது.

ஆக, இப்பாடலில் மூங்கில், கொடிச்சி, நாகமரம், முருகன், பன்றி, நாய் ஆகியவை கருப்பொருளாக வந்துள்ளன எனலாம்.

### *உரிப்பொருள்*

"நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப்பு உற்ற தோளை நீயே
என்னுள் வருதியோ நல்நடைக் கொடிச்சி
..............................................................................
உருவுகண் எறிப்ப நோக்கல் ஆற்றலனே"

என்ற அடிகளில் நிகழ்ந்துள்ள தலைவன் கூற்றின் வழி களவுக்காலச் சந்திப்புத் தலைவன் தலைவிக்கு ஏற்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

## 1.27 83 ஆம் பாடல்

### முதற்பொருள்

“துஞ்சாது அலமரும் பொழுதின்”

என்ற அடியில் தூங்காது இருக்கின்றனர், உன் குரலினால் என்று கூகையைக் கூறுகிறாள், எனவே தூங்கும் நேரமான இரவு இப்பாடலில் பயின்று வந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது. ஆக இப்பாடலின் முதற்பொருள் இரவு என்பது நன்கு புலப்படுகின்றது.

### கருப்பொருள்

“வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை
........................................ நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டோடு மலியப் பேணுதும்”

இவ்வடிகளில் தலைவி கூகையிடம் நீ குழறாது இருந்தால் நெய்ச்சோற்றினையும், எலியினது புலாலினையும் தருகிறேன் என்பதிலிருந்து, கூகை, எலி, நெய்ச்சோறு எனும் கருப்பொருட்கள் இப்பாடலில் வந்துள்ளன எனலாம்.

### உரிப்பொருள்

“வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கை எம் காதலர் வரல் நசைஇத்
துஞ்சாது அலமரும் ................................”

இவ்வடிகளில் தலைவி, கூகையிடம் இரவில் தலைவன் என்னைச் சந்திக்க வருகிறார் அப்பொழுது நீ ஒலி எழுப்புவதால் மக்கள் தூங்காது விழித்துக்கொள்கின்றனர் ஆக, நீ குழறாது இருப்பதற்காக நெய்ச்சோறு எலிப்புலால் ஆகியவற்றைத் தருகிறேன் என்று தலைவி கூறுவதிலிருந்து இரவுக் குறியில் தலைவன், தலைவியைச் சந்திக்கிறான் என்பது புலப்படுகின்றது. எனவே புணர்தல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறியலாம்.

## 1.28 85 ஆம் பாடல்

### முதற்பொருள்

"ஓங்குமலை நாடன்றின் நசையினானே"

என்ற அடியில் பெரிய மலையை உடைய நாடன் என்று கூறப்பட்டுள்ள இவ்வடியில் மலை இடம் பெற்றுள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருள் எனலாம்.

"ஆரிருள் கடுகிய அஞ்சுவரு சிறுநெறி"

என்ற அடியில் 'ஆரிருள்' என்று தலைவன் இருள் பொழுதில் நின் மீது கொண்ட அன்பினால் வருகிறான் என்பதிலிருந்து இரவே இப்பாடலின் பொழுது என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

### கருப்பொருள்

"ஆய்மலர் மழைக்கண் தெண்பனி உறைப்பவும்
வேய்மருள் பணைத்தோள் விறல் இழை...."

இவ்வடிகளில் குவளை மலர் போன்ற கண்ணினையும், மூங்கில் போன்ற தோளினையும் உடையவள் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து, குவளை மலராகவும், மூங்கில் மரமாகவும், வந்துள்ளன என்பதை அறிய முடிகின்றது.

"காந்தளஞ் சிறு ........................."

என்ற அடியில் காந்தள் மலர் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

"குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
குன்றுடை வேழம் நின்று காத்து அல்கும்
..............................................................................
.......................... முளவு மான் கொழுங்குறை"

இவ்வடிகளில் புலிக்கு அஞ்சி வேழம் தன் குட்டியைக் காத்து நிற்கும் என்ற செய்தி இடம்பெற்றுள்ளதால் யானையும், புலியும் இப்பாடலின்

விலங்குகள் என்பதை அறியலாம். முளவுமான் என்று முள்ளம் பன்றியைக் கூறியுள்ளதால் இதுவும் இப்பாடலின் விலங்காகும்.

"கானவன் எய்த ........................
...................... கொடிச்சி மகிழ்ந்து கொடு
ஓங்கு மலை நாடன் ..........................."

இவ்வடிகளில் கானவன், கொடிச்சி, நாடன் என்று தலைமகன், தலைமகள் பெயர்கள் பயின்றுவந்துள்ளன

இப்பாடலில் இடம் பெற்றுள்ள குவளை, காந்தள் மலர்களும், மூங்கில் மரமும், புலி, யானை, விலங்குகளும் நாடன், கொடிச்சி என்ற மக்கட்பெயரும் கருப்பொருட்களாகும்.

***உரிப்பொருள்***

"குறிவரி இரும்புரி அஞ்சிக் குறுநடைக்
கன்றுடை வேழம் நின்றுகாத்து அல்கும்
ஆரிருள் கடுகிய அஞ்சுவடு சிறுநெறி
வாரற்கு ..................................................
ஓங்குமலை நாடன் நின் நசையினானே"

இவ்வடிகளில் ஆரிருள் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து இரவில் தலைவன் பார்க்க வருகிறான் என்பது புலப்படுகின்றது. இரவில் தலைவன் வரும் வழி புலி, யானை போன்ற விலங்குகள் இருப்பதால் வாரற்க என்று தலைவி கூறுவதிலிருந்து, தலைவன் இரவுக் குறியில் தலைவியைப் பார்க்க வருகிறான் என்பதை அறிந்து கொள்ள முடிவதால், களவு காலச் சந்திப்பு நிகழ்ந்துள்ளது புலப்படுகிறது.

## 1.29 88 ஆம் பாடல்

***முதற்பொருள்***

"................... புணர்திரைக்
கடல்விளை அமுதம் பெயற்குஏற் றா அங்கு
உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண்"

இவ்வடிகளில் தலைவியின் மனதில் ஏற்பட்ட வருத்தத்தால் மெலிந்த உடல், மழையில் உப்பு கரைவது போல் இருக்கிறது என்று ஒப்பிடுவதற்காகக் கடலை ஆசிரியர் கூறியுள்ளார். எனவே கடல் இப்பாடலின் நிலம் அல்ல எனலாம்.

"அழுமே தோழி பழமுதிர்குன்றே"

இவ்வடியில் 'குன்றம்' என்று குறிப்பிட்டுள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

### கருப்பொருள்

"கண்ணீர் அருவி யாக
அழுமே தோழி அவர் பழமுதிர் குன்றே"

என்ற பாடல் அடியில், மலையில் அருவிகள் வீழ்வதைக் கற்பனை நயத்துடன் பார்த்த புலவர், தலைவியின் வருத்தத்தை உணர்ந்து பழங்கள் முதிர்ந்து கிடந்த குன்று அழுவதாகக் கூறியுள்ளார்.

இப்பாடலில் இடம் பெற்ற செய்திகள் மூலம் அருவி, மரங்கள் கருப்பொருள்களாக வந்துள்ளன என்பதை அறியலாம்.

### உரிப்பொருள்

"யாம் செய் தொல்வினைக்கு எவன்பேது உற்றனை
வருந்தல் வாழி தோழி யாம் சென்று
உரைத்தனம் வருகம் எழுமதி"

என்று அடிகளில் வருந்தாதே தலைவி, யாம் சென்று தலைவனைப் பார்த்து நாம் படும் துன்பத்தை உரைப்போம் எழுமதி என்பதிலிருந்து, தலைவன் அருகில் இருக்கிறான் என்பது புலப்படுகிறது தலைவன் அண்மையில் இருப்பதால் களவுக்காலச் சந்திப்பு நிகழவாய்ப்பு உண்டு எனலாம்.

## 1.30 93 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"வரைவெள் அருவி மலையின் இழிதரக்

..........................................................................

................. மலைகெழு வெற்புஎனப்"

இவ்வடிகளில் மலை என்ற சொல் பயின்றுவந்துள்ளதால், மலையே இப்பாடலின் முதற்பொருள் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

### கருப்பொருள்

"பிரசம் தூங்கப் பெரும்பழம் துணர
வரைவெள் அருவி மலையின் இழிதரக்
கூலம் எல்லாம் புலம்புக நாளும்"

இவ்வடிகளில் இடம் பெற்றுள்ள செய்திகள் மூலம் மலையில் மரங்களும், அருவியும் இருந்துள்ளன என்பதை அறியமுடிகின்றது. 'கூலம்' என்று இவ்வடியில் வந்துள்ளது "இவை நெல், புல், வரகு, சாமை, தினை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து,அவரை, துவரை, கடலை, மொச்சை ஆகிய பதினாறையும் குறிப்பதே கூலம் என்ற சொல் என்று உரையாசிரியரின் உரையில் கூறப்பட்டுள்ளது"[18]

"பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாட"

இவ்வடியில் வளமிக்க இம்மலையைப் பிரிந்து செல்லும் மனமில்லாத நாட்டை உடையவன் என்று கூறப்பட்டுள்ளதில் நாடன் என்பது தலைமகன் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

### உரிப்பொருள்

"பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாட
செல்கம் எழுமோ சிறக்க நின் ஊழி"

இவ்வடிகளில் இம்மலையை விட்டுப்பிரிந்து செல்ல மனமில்லாத மக்கள் இருக்க, நீ இம்மலையை விட்டுப் பிரிந்து செல்ல நினைக்கிறாய் என்று

தோழி நேரடியாக உரையாடுவதிலிருந்து, தலைவன் இன்னும் பிரிந்து செல்லவில்லை என்பதும், இனிமேல்தான் பிரிந்து செல்ல போகிறான் என்பதும் இப்பாடலில் இடம்பெற்ற செய்திகள். எனவே புணர்தல் நிமித்தம் நிகழ்ந்துள்ளதை இப்பாடலின் வழி அறியலாம்.

### 1.31 95 - ஆம் பாடல்

***முதற்பொருள்***

"குன்றகத் ததுவே கொடுமிளை சீறூர்"

இவ்வடியில் தலைவி குன்றிடத்து உள்ள சிற்றூரிலே இருக்கிறாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து, குன்றம் என்ற மலையைக் குறிக்கும் சொல் பயின்று வந்துள்ளதை அறிய முடிகின்றது. எனவே மலையே இப்பாடலின் முதற்பொருளாகும்.

***கருப்பொருள்***

"கழைபாடு இரங்கப் பலஇயங் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று"

இவ்வடிகளில் கயிற்றில் நடக்கக் கூடிய கழைக்கூத்துப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவற்றிலிருந்து சங்க காலத்திலேயே இக்கூத்து நடைப்பெற்றிருக்கின்றது என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

"அதவத் தீம்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்"

என்ற அடிகளில் அத்திப் பழம் போன்ற சிவந்த முகத்தை உடைய மந்தியின் குட்டி என்று பெண்குரங்கைக் கூறியுள்ளார். மந்தி பெண்பாற் பெயர் என்பது தொல்காப்பியம் கூறும் செய்தியாகும்.

"மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பெண்பாற் பெயரே"[19]

'அதவத்தீம்கனி' என்று வந்துள்ளதால் மலையில் அத்திமரம் இருந்துள்ளது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

"குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும் அக்
குன்றகத் ததுவே கொழுமிளைச் சீறூர்
சீறூரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி ................................"

இவ்வடிகளில் வந்துள்ள குறக்குறு மாக்கள் என்ற சொல் குறவரைக் குறிக்கும் சொல்லாகும். கொடிச்சி என்ற சொல்லும் இவ்வடிகளில் பயின்று வந்துள்ளது. தலைவன், தலைவியைக் கொடிச்சி என்று கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. எனவே குறவர், கொடிச்சி என்ற சொற்கள் மக்கட் பெயரைக் குறிக்கும் கருப்பொருட்கள் ஆகும்.

" ............... தாளம் கொட்டும்"

இவ்வடியில் தாளம் என்று வந்துள்ளதால் இவற்றைப் பறையாக எடுத்துக்கொள்ளலாம்.

ஆக, இப்பாடலில் கழைக்கூத்துத் தொழிலாகவும், அத்தி மரமாகவும், மந்தி விலங்காகவும்,. குறவர் கொடிச்சி மக்கட்பெயராகவும், தாளம் பறையாகவும் பயின்றுவந்துள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவேபிறர்
விடுத்தற்கு ஆகாது பினித்த என் நெஞ்சே"

என்ற அடிகளில் குன்றத்தில் உள்ள சிற்றூரிலே இருக்கும் கொடிச்சியே, என் நோய்க்கு மருந்து என்று கூறுவதிலிருந்து தலைவன் மட்டுமே தலைவி மீது காதல் கொண்டுள்ளான் என்பதும், தலைவி காதல் கொள்ள வில்லை என்பதும் இப்பாடலின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

## 1.32 98 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"ஓங்குமலை வியன் புனம் படீஇயர் வீங்குபொறி"

இவ்வடியில் வந்துள்ள 'ஓங்குமலை' என்பது பெரிய மலை என்ற பொருளுடையதால் மலையே இப்பாடலின் நிலம் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

"இரவின் வரூஉம் ................"

என்ற அடியில் 'இரவு' என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இவையே இப்பாடலின் பொழுதாகும். ஆக, இரவும், மலையுமே, இப்பாடலில் இடம்பெற்றுள்ள முதற்பொருள்களாகும்.

**கருப்பொருள்**

"எய்ம்முள் அன்ன பருஉமயிர் எருத்தின்
செய்ம் மேவல் சிறுகண் பன்றி
.......................................................................
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென"

இவ்வடிகளில் முள்ளம்பன்றி போன்ற மயிரையும், சிறிய கண்ணையும், உடைய பன்றி, மலையில் உள்ள உணவை உண்ணும், அதனால் அப்பன்றியைக் கொல்ல பொறி வைத்திருந்தனர். பொறியின் நுழையில் பன்றி நுழைந்த பொழுது பல்லி ஒலிக்க ஆபத்து என்று உணர்ந்து பன்றி மலையிடை வந்து உறங்கியது. என்று இப்பாடலில்கூறப்பட்டுள்ள செய்திமூலம், பல்லி நிமித்தம் பார்த்தல் சங்ககாலத்திலேயே இருந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

"கல் அளைப் பள்ளி வதியும் நாடன்"

என்ற அடியில் வந்துள்ள நாடன் என்ற சொல் மக்கட் பெயரைக் குறிக்கும் தலைமகன் பெயராகும்.

ஆக இப்பாடலில் முள்ளம்பன்றி, பல்லி, பன்றி ஆகிய விலங்குகளும், நாடன் என்ற தலைமகன் பெயரும் கருப்பொருட்களாக வந்துள்ளன.

### உரிப்பொருள்

"................ நாடன்
எந்தை ஓம்புங் கடிப்பு உடை வியல்நகர்த்
துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி
இரவின் வருஉம் ..........................."

இவ்வடிகளில் தலைவன் தலைவியை இரவு நேரத்தில் சந்திக்க வருதல் குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து, புணர்தலே இப்பாடலின் நிமித்தம் என்பதை நன்கு அறிய முடிகின்றது.

### தொகுப்புரை

இந்த இயல்வழி அறியலாகும் கருத்துக்கள் வருமாறு,

❖ குறிஞ்சித்திணைக்குரிய நிலமான மலை 1,6,23,39,82,83ஆம் பாடல்கள் தவிர அனைத்துப் பாடல்களிலும் இடம்பெற்றுள்ளன. மலை என்று வெளிப்படையாகவும், வரை, குன்றம் என்று மலையைக் குறிக்கும் சொற்கள் வழியும், பாடல்களில் குறிஞ்சி நிலம் இடம்பெற்றுள்ளது.

❖ முன்பனிக்காலம், கார்காலம், யாமம், இரவு ஆகிய பொழுதுகள் பாடலில் இடம்பெற்றுள்ளன.

❖ குறிஞ்சித் திணைக்குரிய கடவுளான முருகன் பற்றிய செய்தி பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

❖ புலியும், யானையும் மிகுதியாக இத்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. மான், மந்தி, பன்றி, நாய், எலி ஆகிய விலங்குகளும் இடம் பெற்றுள்ளன.

❖ மூங்கில், சந்தனம், ஆசினி, நெய்தல், வேங்கை, நாகமரம், ஆகிய மரங்கள் இத்திணைப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

❖ மயில், கிளி, கூகை, வண்டு ஆகிய பறவைகள் பாடல்களில் பயின்றுவந்துள்ளன. இவற்றில் குறிப்பிடப்பட்ட வண்டு, மிகுதியான பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

❖ பல்லி நிமித்தம் பார்த்தல், கழைக்கூத்து ஆகியவை பற்றிய செய்திகள் 98,95 ஆம் பாடல்களில் இடம் பெற்றறுள்ளன.

❖ குவளை, காந்தள், நெய்தல், ஆம்பல், நறவம், வேங்கை, கடம்பம், முல்லை ஆகிய மலர்கள் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. இவற்றில் காந்தள், குவளை மலர்கள் மிகுதியாகப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

❖ தலைமகளை கொடிச்சி என்றும், தலைமகனை நாடன், வெற்பன், குறவன் என்றும் குறிப்பிடுவது பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது.

❖ குறிஞ்சித்திணையின் உரிப்பொருளான புணர்ச்சி, பாடல்களில் மறைமுகமான, வெளிப்படையான செய்திகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், அகத்திணையியல், - 5
2. மேலது, 7.
3. மேலது, 8.
4. மேலது, 16.
5. நம்பி அகப்பொருள்.34
6. மேலது, 7.
7. மேலது, 7.
8. தொல்காப்பியம் அகத்திணையியல் - 20.
9. குறுந்தொகை.68.
10. மேலது,82.
11. மலைபடுகடாம், 235.
12. சிலப்பதிகாரம் வேட்டுவவரி,12.
13. தொல்காப்பியம், மரபியல். 50.
14. தொல்காப்பியம், களவியல்,10.
15. மலைபடுகடாம்,76.
16. பத்துப்பாட்டு,80.
17. தொல்காப்பியம், மரபியல்,582.
18. நற்றிணை,123.
19. தொல்காப்பியம், செய்யுளியல்.3.

இயல் - 2



# நற்றிணை முல்லைத் திணைப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

## இயல் - இரண்டு

# நற்றிணை முல்லைத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்.

### 2.0 முன்னுரை

ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற நற்றிணைப் பாடல்களில் 8 பாடல்கள் முல்லைத்திணைக்கு உரியவை இந்த 8 பாடல்களில் காணலாகும் முதல், கரு, உரிபொருள்களைக் கண்டறிவது இந்த இயலின் நோக்கம். இங்கு, பாடல்களின் எண் வரிசை அடிப்படையில் கருத்துக்கள் விளக்கப்பெறுகின்றன.

### முல்லைத்திணை

தொல்காப்பியர் முல்லைத் திணைக்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்று இலக்கணம் வகுத்துள்ளார். அவை வருமாறு

"மாயோன் மேய காடுறை உலகமும்"[1]

"காடும் மாலையும் முல்லை"[2]

"உணவு - வரகும் முதிரையும், மடா - மானும் முயலும், மரம் - கொன்றையும், குருந்தும் புதலும், புள் - கானாங்கோழி, பறை - ஏறு கோட் பறை, செய்தி - நிரைமேய்த்தல், யாழின் பகுதி என்பது பண், அதுசாரி. பிறவும் என்றதனால், பூ முல்லையும் பிடவும் தளவும், நீர் - கான்யாறு பிறவும் இந்நிகரன கொள்க"[3] என்று தொல்காப்பிய கருப்பொருளுக்கு இளம்பூரணர் விளக்கம் கூறியுள்ளார்.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்"

இவற்றில் முல்லையின் உரிப்பொருள் இருத்தல் என்பதாகும்.

### 2.1 21 ஆம் பாடல்

#### முதற்பொருள்

"பெயல்நீர் போகிய வியன்நெடும் புறவின்"

இவ்வடியில் பயின்று வந்துள்ள புறவின் என்ற சொல் காட்டைக் குறிப்பதால் இப்பாடலுக்குரிய நிலம் 'காடும் காடு சார்ந்த இடமும்' என்பது நன்கு புலப்படுகிறது.

இதே அடியில் வந்துள்ள 'பெயல் நீர்' மழையைக் குறிப்பதால், பொழுதாகிய கார்காலத்தை இவ்அடிசுட்டுவதை அறிந்து கொள்ளமுடிகிறது. எனவே இப்பாடல் காட்டையும் கார்காலத்தையும் முதற்பொருளாகக் கொண்டுள்ளது என்பதை அறியலாம்

### கருப்பொருள்

"ஏகுமதி வலக தேரே ......................"

இவ்வடியில், விரைந்து செலுத்துகத்தேரே என்று தலைவன் கூறுவதால் குதிரை பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. என்பது புலப்படுகிறது. வெளிப்படையாகக் குதிரையைக் கூறவில்லை என்றாலும் உள்பொருள் குதிரையைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

"காமரு தகைய கானவாரணம்"

இவ்வடியில் பயின்றுவந்துள்ள 'கானவாரணம்' காட்டுக் கோழியைக் குறிக்கிறது. எனவே இப்பாடலின் வழிக் கருப்பொருள் குதிரையும், காட்டுக்கோழியும் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

### உரிப்பொருள்

"ஏகுமதி வலவ தேரே .........................."

என்ற அடியிலிருந்து தலைவன் தலைவியைக் காண வருகிறான் என்பதும், தலைவி தலைவனுக்காக இல்லறத்தில் காத்திருக்கிறாள் என்பதும் புலப்படுகின்றன. எனவே இப்பாடலின் உரிப்பொருள் 'இருத்தலும் இருத்தல் நிமித்தமும்' என்பதை அறியலாம்.

## 2.2 42 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"பழமழை பொழிந்த புதுநீர் அவல"

மழை பெய்யும் காலம் கார்காலம் என்பதால் இவ்வடியில் பயின்றுவந்துள்ள 'மழை' என்ற சொல் பெரும் பொழுதாகிய கார்காலத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளது. ஆகவே இப்பாடலின் வழி முதற்பொருள் கார்காலம் என்பது அறிந்து கொள்ள முடிகின்றது.

***கருப்பொருள்***

"பழ மழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க நாவுடை"

என்ற அடிகளில் பயின்று வந்துள்ள 'கறங்க' என்ற சொல் ஒழித்தல் என்று பொருள்படும். மழை பெய்யும் காலத்தில் ஒலி எழுப்பக் கூடியதை அச்சொல் குறிக்கின்றது. அதுவும் நா உடைய உயிரினத்தைக் குறிக்கின்றது. இவற்றின் வழி 'பல்கிளை' என்பது தவளையைக் குறிக்கிறது என்று கருதலாம்.

"சில் போது கொண்டு பல் குரல் அழுத்திய
..................................................................
அவிழ் பூ முடியினள் .........................."

என்ற இவ்வடிகளில் வந்துள்ள 'போது', 'பூ' ஆகிய இரண்டும் ஒரே பொருளைக் குறிக்கக் கூடிய சொற்கள் "ஒரு பொருள் குறித்த பல சொல்" என்ற இலக்கணத்திற்குச் சான்றாக அமைகின்றன. பூ போது ஆகிய இரண்டும் எந்தத் தாவரத்திற்கு உரியவை என்று கூறாமல் பொது நிலையில் கூறப்பட்டுள்ளன. மலர்கின்ற நிலையைப் போது எனும் சொல் குறிக்கின்றது. மலர்ந்த நிலையைப் பூ என்ற சொல் குறிக்கின்றது இந்த இரு நிகழ்வும் செழிப்பான கார்காலத்தில் நிகழ்பவை என்பது கருதத்தக்கது.

"போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ"[5]

என்று போது பற்றிக் கூறப்பட்டுள்ளது.

"மறத்தற்கு அரிதால் பாக .........................."

இவ்வடியில் ‘பாக’ என்று தேர் செலுத்தும் பாகனைக் கூறியிருப்பதால், இப்பாடலில் குதிரை பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது.

**உரிப்பொருள்**

“மறத்தற்கு அரிதால் பாக ....................

................................................

மடமா அரிவை மகிழ்ந்து அவர் நிலையே”

என்ற அடிகளில் நிகழ்ந்துள்ள கூற்றுத் தலைவனுடையது. முன்பு ஒரு நாள் தலைவியைச் சந்தித்தபோது அமைந்த மகிழ்வை மறத்தல் அரிதானது என்று பாகனிடம் இறந்தகால நிகழ்வைத் தலைவன் கூறுகின்றான். பாகன் என்பவன் தேரினைச் செலுத்துபவன் அவனிடம் சொல்வதாகப் பாடல் அமைவதால் பயணத்தில் தலைவன் சொல்வதாகக் கருதவேண்டி உள்ளது. மேலும், அன்று தலைவி காத்திருந்தாள் தலைவன் வருகைக்காக என்பதும் பாடலில் இடம்பெற்று உள்ளது. ஆகவே இப்பாடலின் உரிப்பொருள் இருத்தல் நிமித்தம் எனலாம்.

## 2.3 59 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

“வன்புலக் காட்டுநாட் டதுவே .............

நுண்முகை அவிழ்த்த புறவின்”

இவ்வடிகளில் வந்துள்ள காடு, புறவு என்ற சொற்கள் ஒரே பொருளைக் குறிக்கின்றன. இவை தலைவி வாழும் ஊர் காட்டுப் பகுதியைச் சேர்ந்தவை என்பதை அறிந்து கொள்ள உதவுகின்றன. இதன் மூலம் தலைவிமுல்லை நிலத்தைச் சார்ந்தவள் என்பதை அறியமுடிகின்றது. எனவே இப்பாடலின் முதற்பொருள் ‘காடும் காடு சார்ந்த இடமும்’ என்பது நன்கு புலப்படுகிறது.

**கருப்பொருள்**

“உடும்பு கொலீஇ, வரிநுணல் அகழ்ந்து

நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி

எல்லு முயல் எறிந்த வேட்டுவன் அம்சுவல்”

என்ற அடிகளில் உடும்பு, முயல் இவ்விலங்கினங்களை வேட்டையாடி இருக்கின்றனர். பறவையாகிய ஈயலையும் வேட்டையாடி இருக்கின்றனர். எனவே உடும்பு, ஈயல், முயல் ஆகியவை இப்பாடலின் கருப் பொருள்களாகப் பயின்றுவந்துள்ளன எனலாம்.

" ................ முல்லை
நுண்முகை அவிழ்ந்த புறவின்"

இவ்வடியில் முல்லை 'நுண்முகை' என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து முல்லைப் பூ இப்பாடலின் பூவாகப் பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது.

"எல்லுமுயல் எறிந்த வேட்டுவன் .............."

என்ற இவ்அடியில் வந்துள்ள 'வேட்டுவன்' என்ற சொல் வேட்டைத் தொழில் செய்பவனைக் குறிப்பதால் இப்பாடலில் வேட்டைத் தொழில் கூறப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

***உரிப்பொருள்***

" ........ நெஞ்சத்து
உள்ளினள் உறைவோள் ஊரே முல்லை
நுண்முகை அவிழ்ந்த புறவின்
பொறைதலை மணந்தன்று உயவுமார் இனியே"

இவ்வடிகளில் நெஞ்சத்துத் தன்னை நினைத்து வாழ்வாள் என்று தலைவன் கூறுவதிலிருந்தும், முல்லை அரும்பியக் காட்டில், பொறுமைக் கலந்த நிலையோடு காத்திருப்பாள் என்பதிலிருந்தும் இப்பாடலின் உரிப்பொருள் இருத்தல் நிமித்தம் என்பது நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது.

## 2.4 69 ஆம் பாடல்

***முதற்பொருள்***

"பல்கதிர் மண்டிலம் பகல் செய்து ஆற்றிச்
சேய்உயர் பெருவரைச் சென்றவண் மறையப்"

என்ற அடிகளில் வந்துள்ள ‘வரை’ என்ற சொல் குறிஞ்சித் திணைக்குரிய நிலத்தைக் குறிப்பதால் இப்பாடல் குறிஞ்சித் திணைப்பாடல் என்று கருத இடமில்லை. மலையில் (வரை) மறைந்ததால் மாலைப் பொழுது வந்தது என்பதை உணர்த்துவதற்காக வரை என்று சொல்லைப்புலவர் இவ்வடியில் குறிப்பிட்டுள்ளார். எனவே இவ்வடியின் வழி இப்பாடலின் குறிப்பிட்டுள்ள பொழுது ‘மாலை’ என்பதும் வரை இப்பாடலின் நிலம் அல்ல என்பதும் புலப்படுகின்றன.

“ .................... புறவின்
மா எருத்து மடப்பிணை தழுவ”

என்ற அடிகளில் புறவின் ஆண்மான், பெண்மானைத் தழுவி நின்றது என்று நிகழ்ந்தது உணர்த்தப்பெற்றுள்ளது. ஆகையால் இப்பாடலில் நிலம் புறவு (காடு) என்பது புலப்படுகிறது. எனவே இப்பாடலில் இடம் பெற்றுள்ள முதற்பொருள் காடும், மாலையும் எனலாம்.

### கருப்பொருள்

“பறவை பார்ப்புவயின் அடையப் புறவின்
மாஎருத்து இரலை மடப்பிணை தழுவ
முல்லை முகைவாய் திறப்பப் பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல்விளக் குறாஅ”

என்ற அடிகளில் வந்துள்ள பறவை பார்ப்பு. மான் முல்லை, தோன்றி (காந்தள்) கருப்பொருளாக இப்பாடலில் பயின்றுவந்துள்ளன.

“கொடுங்கோல் கோவலர் குழலோடு ஒன்றி”

என்ற அடியில் ‘கோவலர்’ என்ற சொல் பயின்றுவந்துள்ளதால் தொழில் ஆநிரை மேய்த்தல் எனலாம்.

### உரிப்பொருள்

“ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்
இனைய ஆகித் தோன்றின்
வினைவலித்து அமைதல் ஆற்றலர் மன்னே”

‘ஆள்வினைக்கு அகன்றோர்’ என்ற அடியில் இருந்து தலைவன் பொருள்தேடி சென்றிருக்கிறான் என்பதும், தலைவி அவன் வருகைக்காகக் காத்திருக்கிறாள் என்பதும் அறியப்படுகின்றன. எனவே இருத்தல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள்.

## 2.5 81 - ஆம் பாடல்

### முதற்பொருள்

“இருநிலம் குறையக் கொட்டிப் பரிந்தின்று” என்ற அடியில் நிலம் என்ற சொல் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

### கருப்பொருள்

“மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி”

என்ற அடியில் ‘புரவி’ என்ற சொல் குதிரையைக் குறிப்பதால் குதிரையே இச்செய்யுளின் கருப்பொருளாக அமைகின்றது.

### உரிப்பொருள்

“பூண்கதில் பாகநின் தேரே பூண்தாழ்

..............................................

விருந்து அயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய
முறுவல் இன்னகை காண்கம்”

என்ற அடிகளில் பாக விரைந்து செலுத்துத் தேரை தலைவி இன்னகை முகத்தினலாய்க் காத்திருப்பாள் என்று தலைவன் கூறுவதால், இப்பாடலின் உரிப்பொருள் இருத்தல் நிமித்தம் எனலாம்.

## 2.6 89 ஆம் பாடல்

### முதற்பொருள்

“கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்
திரைப்பிதிர் கடுப்ப முகடு உகந்து ஏறி”

என்ற அடிகளில் மேகம் சூழ்ந்து மலைமேல், காணப்படும் அக்காட்சியைப் புலப்படுத்தி, மழை பெய்யப் போகும் காட்சியைக் கூற முகடு என்ற சொல்லை இப்பாடலில் கூறியுள்ளார். எனவே மலை

இப்பாடலின் நிலம் அல்ல என்பதை அறியலாம்.

"நிரைத்து நிறை கொண்ட கமஞ்சூல் மாமழை

........................................................

புன்கண் மாலையும் புலம்புமுந் துறுத்தே"

என்ற அடிகளில் மழை பற்றியும் 'மாலை' பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளதால் கார்காலமும் மாலையும் பொழுதாகக் கருதப்படுகின்றன.

"இரும்பனி பருவத்து......................"

என்ற அடியில் வந்துள்ள 'இரும்பனி' என்ற சொல் முன்பனிக் காலத்தைக் குறிக்கும். இப்பருவம் குறிஞ்சித் திணைக்குரியது. எனவே இப்பாடலில் முன்பனிக்காலம் மயங்கி வந்துள்ளது எனலாம்.

**கருப்பொருள்**

"பரும யானை அயாஉயிர்த் தா அங்கு"

என்ற அடியில் வந்துள்ள 'யானை' இப்பாடலின் கருப்பொருளாக அமைகின்றது.

**உரிப்பொருள்**

"...................... தோழி வாரா

வன்க ணாளரோடு இயைந்த

புன்கண் மாலையும் புலம்புமுந்துறுத்தே"

என்ற அடிகளில் தலைவர் வந்துவிட்டார், இனி வாடை வந்தாலும் வருத்தாது என்று தோழி கூறுவதிலிருந்து தலைவி காத்திருக்கிறாள் என்பது புலப்படுகிறது. எனவே இப்பாடலின் உரிப்பொருள் இருத்தல் நிமித்தம் என்பதை அறியமுடிகின்றது.

## 2.7 97ஆம் பாடல்

### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருள் இடம்பெற வில்லை.

***கருப்பொருள்***

"...................... குயிலினும்
தேறுநீர் கெழீஇய யாறுநனி கொடிதே
..................................
துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீரோஎன
வண்டுசூழ் வட்டியள் .................."

என்ற அடிகளில் குயில், ஆறு, குருகு, பித்திகை, வண்டு போன்றவை பயின்றுவந்துள்ள கருப்பொருட்கள் ஆகும். இவற்றில் உள்ள பித்திகையைப் பிச்சிப்பூ என்று கூறியுள்ளதை இலக்கியங்களின் உரை வழி அறியலாம் அவை வருமாறு,

"மாரிப் பித்திகந்து நீர்வார் கொழுமுகை"[6]
"செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்"[7]
"வஞ்சி பித்திகஞ் சிந்து வாரந்"[8]

***உரிப்பொருள்***

"எவ்வ நெஞ்சத்து எஃகு எறிந் தாங்கு"

என்ற அடியின் மூலம் தலைவனை நினைத்துத் தலைவி வருந்துகிறாள் என்பது புலப்படுவதால் உரிப்பொருள் இருத்தல் நிமித்தம் எனலாம்.

## 2.8 99 ஆம் பாடல்

***முதற்பொருள்***

"அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
..............................................
காரென்று அயர்ந்த ......................

என்ற அடிகளில் சுரமும், காடும் பயின்றுவந்துள்ளதால் இப்பாடலின் முதற்பொருள் காடும், கார்காலமும் என்பது நன்கு புலப்படுகின்றது.

### கருப்பொருள்

"மறந்து கடல் முகந்த கமம்சூல் மாமழை

..................................................

பிடவுங் கொன்றையுங் கோடலும்

மடவ ஆகலின் மலர்ந்தன பலவே"

என்ற அடிகளின் வந்துள்ள பிடவம், கொன்றை கோடல் (காந்தள்) போன்றவை இப்பாடலின் கருப்பொருள்களாகப் பயின்றுவந்துள்ளன.

### உரிப்பொருள்

கார்காலத்தில் வருவதாய்ச் சொன்ன தலைவன் பருவம் வந்தும் வாராததைக் கண்டு வருந்திய தலைவியிடம் இது கார்காலம் அன்று, என்று கூறுவது இப்பாடலின் வழி அறியப்படுவதால், தலைவனுக்காகத் தலைவி காத்திருப்பது புலப்படுகின்றது. எனவே உரிப்பொருள் இருத்தல் என்பதை அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

இவ்இயலின் வழி அறியலாகும் கருத்துக்கள் வருமாறு,

- ❖ முல்லைத்திணைக்குரிய நிலம், காடு என்பதற்கு ஏற்பப் பாடல்களிலும் காடு பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.
- ❖ பொழுதாகக் கார்காலமும், மாலையும் இடம் பெற்றுள்ளன. கார்காலத்தை உணர்த்தும் செய்திகள் மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.
- ❖ குதிரை, தவளை, உடும்பு, முயல், பசு, மான், யானை ஆகிய விலங்குகள் இத்திணைப்பாடல்களில் இடம்பெற்றுள்ளன.
- ❖ முல்லை, காந்தள், பிடவம், கொன்றை மலர்கள் பாடல்களில் பயின்று வந்துள்ளன.
- ❖ கானவாரணம், ஈயல், பார்ப்பு, குயில், குருகு ஆகிய பறவைகளும் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

- ஆநிரை மேய்தலும், வேட்டைத் தொழிலும் இத்திணைப் பாடல்களில் இடம் பெற்ற தொழில்களாகும்.

- இத்திணையின் உரிப்பொருள் 'இருத்தல்' என்பதற்கு ஏற்பப் பாடல்களின் தலைவிதலைவனுக்காகக் காத்திருப்பதும், தலைவி காத்திருப்பாள் விரைவாகத் தேரைச் செலுத்து என்று தலைவன் கூறுவதும் நிகழ்வுகளாக அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், அகத்திணை இயல், 5.
2. மேலது, 6.
3. மேலது,18.
4. மேலது,16.
5. பத்துப்பாட்டு.564.
6. குறுந்தொகை,168.
7. நெடுநல்வாடை,40.
8. குறிஞ்சிப்பாட்டு,89.

இயல் - 3



# நற்றிணை மருதத் திணைப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

# இயல் - மூன்று

# நற்றிணை மருதத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்

## 3.0 முன்னுரை

ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற நற்றிணைப் பாடல்களில் 9 பாடல்கள் மருதத்திணைக்கு உரியவை. இந்த 9 பாடல்களிலும் காணலாகும் முதல், கரு, உரிப்பொருள்களைக் கண்டறிவது இந்த இயலின் நோக்கம்.

இங்கு, பாடல்களின் எண் வரிசை அடிப்படையில் கருத்துக்கள் விளக்கப்பெறுகின்றன.

## மருதத்திணை

தொல்காப்பியர் மருதத்திணைக்கு நிலம், வயல் என்றும் பொழுது வைகறை, விடியல் என்றும் கூறியுள்ளார். உரிப்பொருள் 'ஊடல்' என்று கூறியுள்ளார். இம்மருதத்திணை வேளாண்மைச் செய்து *வாழக்கூடியவர்* வாழும் பகுதியைக் கொண்டதாகும். தொல்காப்பியர்,

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"[1] என்று கூறியுள்ளார். தீம்புனல் என்றது நீர் நிறைந்த நிலம் என்பதாகும். இவற்றிற்குச் சான்றாக,

"நீர் வாய் தண் பணை தழீஇய தளரா இருக்கை நல் ஊர நாட் டொடு - நீரை எப்பொழுதும் தன்னிடத்தே யுடைத்தாகிய தண்ணிய மருத நிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப் பினையுடைய நன்றான பல ஊர்களையுடைய"[2] என்று கூறப்பட்டுள்ளது.

"வைகறை விடியல் மருதம்"[3]

என்று மருதத்திணைக்கு இலக்கணங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன.

### 3.1 20 - ஆம் பாடல்

#### முதற்பொருள்

முதற்பொருள் இப்பாடலில் இடம் பெறவில்லை

### கருப்பொருள்

"தேம்பாய் மரா அம் கமழும் கூந்தல்"

இவ்வடியில் வந்துள்ள மராஅம் என்பது வெண்கடம்ப மரத்தையும், கமழும் என்பது அம்மரத்தில் உள்ள பூவின் மணத்தையும் குறிக்கின்றன. எனவே வெண்கடம்பம் பூ இப்பாடலில் பயின்றுவந்துள்ளது என்பதை அறியலாம். இம்மராஅம் தொடர்பான பதிவுகளாக வேறு சிலவும்

"சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து"[4]

"நெடுங்கால் மராஅத்தும் குறுஞ்சினை பற்றி
வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு"[5]

என்று அமைந்துள்ளன.

"மகிழ்நன் மார்பில் துஞ்சி ................."

என்ற அடியில் வந்துள்ள மகிழ்நன் தலைமக்கட் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும். எனவே இப்பாடலில் இடம் பெற்றுள்ள கருப்பொருட்கள் வெண்கடம்பமரம், அவற்றின் பூ, மகிழ்நன் என்பது நன்கு புலப்படுகிறது.

### உரிப்பொருள்

"ஐய குறுமகட் கண்டிகும் வைகி
மகிழ்நன் மார்பில் துஞ்சி .................
.....................................................................
செறிதோடி தெளிர்ப்ப வீசி மறுகிற்
பூப்போ உண்கண் பெயர்ப்ப நோக்கிச்
சென்றனள் வாழிய மடந்தை"

இவ்வடிகளில் தலைவனிடம் உன்னுடைய காதற் பரத்தை உன்மார்பில் துஞ்சி, பிறகு, இவ்வழியே மலர் போன்ற கண்ணைச் சுழற்றிக் கொண்டு சென்றனள் நான் பார்த்தேன். நின்னோடு அவள் நீடுழி வாழ்வாளாக என்று தலைவி கூறுவதிலிருந்து தலைவனிடம் ஊடல் கொண்டுதான்

அப்படிச் சொல்கிறாள் என்பது புலப்படுவதால், இப்பாடலின் உரிப்பொருள் ஊடல் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

### 3.2 30 - ஆம் பாடல்

#### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருள் இடம்பெற வில்லை.

#### கருப்பொருள்

"கண்டனென் மகிழ்ந, கண்டு எவன் செய்கோ"

இவ்வடியில் பயின்று வந்துள்ள 'மகிழ்ந' என்ற சொல் மக்கட்பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும். இங்குத் தலைவி தலைவனை மகிழ்ந என்று கூறுகிறாள்.

"பாணன் கையது பண்புடை சீறியாழ்"

என்ற அடியில் வந்துள்ள பாணன் இசைக்கும் சீறியாழ் என்பதைக் கருப்பொருளில் ஒன்றாகிய யாழின் வகையாகக் கருதலாம்.

"யாணர் வண்டின் இம்மென இமிரும்"

என்ற அடியில் வண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. இது பறவை இனத்தைச் சேர்ந்த கருப்பொருளாகும். ஆக, மகிழ்ந, சீறியாழ், வண்டு ஆகியவை இப்பாடலில் பயின்றுவந்துள்ள கருப்பொருளாகும்.

#### உரிப்பொருள்

"கண்டனென் மகிழ்ந கண்டுஎவன் செய்கோ
ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கிநின்
மார்பு தலைக் கொண்ட மாணிழை மகளிர்
வாங்க வாங்க நின்று ஊங்குஅருர் நிலையே"

என்ற அடிகளில் தலைவன் பரத்தையுடன் கொண்ட தொடர்பையும் அவர்கள் தலைவனின் கையைப் பற்றி இழுத்து வாங்க வாங்க என்று கூறியதையும் கண்டேன் என்று தோழி கூறுவதிலிருந்து, தலைவனின் பரத்தையர் தொடர்பு, தலைவிக்குத் தோழியின் வழியாகத் தெரிகின்றது. இதனால் தலைவனிடம் ஊடல் கொண்டிருத்தல் புலப்படுகிறது.

### 3.3 40 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நள்ளென் கங்குல் கள்வன் போல"

என்ற அடியில் பயின்று வந்துள்ள 'கங்குல்' என்பது இரவைக் குறிக்கும் வைகறைப் பொழுதாகும். எனவே வைகறைப் பொழுது இப்பாடலின் முதற்பொருளாகும்.

**கருப்பொருள்**

"அகன்துறை ஊரனும் வந்தனன்"

இவ்வடியில் வந்துள்ள 'ஊரன்' என்பது தலைமகன் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"நள்ளென் கங்குற் கள்வன் போல
அகன்துறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே"

என்ற அடிகளில் தலைவன் 'கள்வன் போல' இரவில் வந்து புதல்வனைப் பார்த்தான் என்பதிலிருந்து தலைவனிடம் தலைவி ஊடல் கொண்டதால் தான் அவன் உறங்கும் போது வந்து பார்க்கின்றான் என்பது புலப்படுகின்றது. எனவே 'ஊடல்' இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### 3.4 50 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருளான, நிலம் பொழுது பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை.

**கருப்பொருள்**

கருப்பொருள் பற்றிய செய்திகளும் இப்பாடலில் இடம்பெறவில்லை. தலைவன், தோழி, தலைவி ஆகியோர் தொடர்பான நிகழ்வாகப் பாடல் அமைகின்றது என்பதை மட்டும் அறிய முடிகின்றது.

**உரிப்பொருள்**

“நொதும லாளன் கதுமெனத்  தாக்கலின்
கேட்பார் ஊளர்கொல் இல்லை கொல் போற்று என
யாணது பசலை என்றனள் அதன்  எதிர்
நாணிலை எலுவ......................”

இப்பாடல் அடிகளை வைத்துப் பார்க்கும் போது ஊடலே இப்பாடலின் உரிப்பொருள் என்று அறிந்துகொள்ள முடிகின்றது. எவ்வாறென்றால், துணங்கைக் கூத்து ஆடி வந்த தலைவனை, தோழி பார்த்து, உன்னைக் கேட்பார் இல்லையா? என்று கேட்டு, தலைவன் நின் பசலை அழகுடையது என்று கூறினான், நான் அவனை நீ நாணமில்லாதவன் என்று கூறிவந்தேன் என்று தலைவியிடம் கூறுவதிலிருந்து, ஊடல் உரிப்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**3.5 60 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

“மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்
பெருநற் பல்கூட் டெருமை உழவ”

இவ்வடிகளின், முதல் அடியில் மலை என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் என்று கருத இயலவில்லை. காரணம் உழவர் நெல்லைச் சேமித்து வைக்க பல்கூடு (குதிர்) கட்டுவர். அது மலை போன்று உள்ளது என்று உவமைநிலையிலேயே மலை கூறப்பட்டுள்ளது. மேலும் இப்பாடலின் ஒட்டு மொத்தப் பொருண்மை நிலை வேளாண்மை தொடர்பாகவும் அமைந்துள்ளது.

“நீருறு செறுவில்  நாறுமுடி யழுத்தநின்”

என்ற அடியில் நீர் நிறைந்த சேற்றில் நாற்று நடச் செல்லும் உழவ என்று கூறுவதிலிருந்து இப்பாடலில் குறிப்பிடப்பட்ட நிலம் வயல் என்பது புலப்படுகின்றது.

"கண்படை பெறாது தண்புலர் விடியல்"

என்ற அடியில் 'கண்படை பெறாது' என்பது இரவில் உறங்காது இருந்ததைக் குறிக்கின்றது. அதே அடியில் பயின்று வந்துள்ள 'விடியல்' பகற்பொழுதின் முற்கூறைக் குறிக்கின்றது. எனவே இப்பாடலில் வைகறை விடியல் என்ற இருபொழுதும் பயின்றுவந்துள்ளன என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

### கருப்பொருள்

"பெருநெற் பல்கூட் எருமை உழவ"

என்ற அடியில் எருமை விலங்காகப் பயின்று வந்துள்ளது, அதே அடியில் 'உழவ' என்ற சொல் மக்கட் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாக வந்துள்ளது. உழவ என்று கூறியுள்ளதிலிருந்து தொழில் உழவுத்தொழில் என்பதையும் நன்கு அறிந்து கொள்ளமுடிகின்றது.

"கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு"

இவ்வடிகளின் வழி இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள உணவு, மீனும், அரிசி சோறும் ஆகும்.

### *உரிப்பொருள்*

தலைவி இற்செறிக்கப்படுதல் இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

## 3.6 70 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்"

என்ற அடியில் வந்துள்ள கழனி என்ற சொல் வயலைக் குறிக்கிறது. எனவே இப்பாடலில் பயின்று வந்துள்ள நிலம் வயல் என்பது புலப்படுகின்றது.

"கழனியம் படப்பைக் காஞ்சியூர"[6]
"யொலிந்த பகன்றை விளைந்த கழனி"[7]
என்பன சங்க இலக்கியப் பதிவுகளில் சில.

**கருப்பொருள்**

"சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங்குருகே"

என்ற அடியில் வந்துள்ள சிறுவெள்ளாங்குருகு என்பது நாரையைக் குறிக்கும். எனவே நாரை இப்பாடலில் பயின்று வந்துள்ள பறவையாகும்.

"சினைக்கெளிற்று ஆர்கையை அவர் ஊர்ப் பெயர்தி"

என்ற அடியில் வந்துள்ள 'கெளிறு' என்பது மீனைக் குறிக்கிறது. எனவே மீன் இப்பாடலின் கருப்பொருள் எனலாம்.

"ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்"

என்ற அடியில் வந்துள்ள புனல் என்ற சொல் நீரைக் குறிக்கிறது. தலைவன் ஊரிலிருந்து வந்த நீர் இவ்வூர் நிலத்தில் பாய்கிறது என்பதிலிருந்து, ஆற்றுநீர் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**உரிப்பொருள்**

"சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங்குருகே

..........................................................................

...................... மகிழ்நர்க்கு என்

இழை நெகிழ் பருவரல் செப்பா தோயே"

இவ்வடிகளில் குருகே என் நிலையைத் தலைவனிடம் கூறாமல் இவ்வூர் வந்து கெளிற்று மீனைத் தின்று செல்கிறாயே என்று தலைவனிடம் கொண்ட ஊடலை இக்குருகின் மீது காட்டுவது புலப்படுகிறது. அஃறிணை உயிர்களிடம் சங்ககால மகளிர் உரையாடுவர் என்பதற்குச் சான்றாக இப்பாடல் அமைகின்றது.

### 3.7 80 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து

..................................................................

தைஇத் திங்கள் தண்கயம் படியும்"

இவ்வடிகளில் விடியல், தைத்திங்கள் என்று பொழுதுகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள, விடியல் பகற்பொழுதின் முற்கூறையும், தைத்திங்கள் அம்மாதத்தின் பொழுதாகிய முன்பனிக் காலத்தையும் குறிக்கின்றன. ஆக விடியலும் முன்பனிக்காலமுமே இப்பாடலின் பொழுதைக் குறிக்கம் முதற்பொருட்களாகும்.

***கருப்பொருள்***

"தழையுந் தாரும் தந்தனன்.................."

இவ்வடிகளில் வந்துள்ள தார் என்ற சொல் பல பூக்களின் தொகுப்பான மாலையைக் குறிக்கும். பூக்களின்பெயர் கூறவில்லை என்றாலும், பல மலர்களை உள்ளடக்கிய தாரைக் கருப்பொருளாகக் கருதலாம்.

"மன்ற எருமை மலர்தலைக் கார்ஆன்
இன்தீம் பால்பயம் கொண்மார் கன்றுவிட்டு"

இவ்வடிகளின் வழி நிரைமேய்த்தல் தொழில் என்பதும், எருமையும் அதனுடைய கன்றும் விலங்கு என்பதும், அறிந்து கொள்ளமுடிகின்றன. பால் உணவுப் பொருளாகப் பயன்பட்டிருக்கின்றது. ஆக, தார், நிரைமேய்த்தல், எருமை, பால் ஆகியவை இப்பாடலில் பயின்று வந்துள்ள கருப்பொருட்களாகும்.

***உரிப்பொருள்***

"பெருந்தோள் குறுமகள் அல்லது
மருந்துபிறிது இல்லையான் உற்றநோய்க்கே"

இவ்வடிகளின் வழித் தலைவன் தலைவி மீது கொண்ட அன்பு புலப்படுகின்றது. இவற்றிற்குச் சான்றாக

"இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது, ஒரு நோக்கு
நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து"[8]

இக்குறள் அமைகின்றது.

### 3.8 90 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் இடம்பெறவில்லை

**கருப்பொருள்**

"வறன்இல் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங்கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர ஓடி"

இவ்வடிகளில் புலத்தி வெளுத்த ஆடையை அணிந்து மாலை அசைந்தாட ஓடி வந்த இவள் பெதும்மைப் பருவத்தை உடையவள் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து 'புலத்தி' என்ற சொல் ஆடையை வெளுக்கும் தொழிலைச் செய்யும் வண்ணாத்தியைக் குறிக்கும். அடுத்த அடியில் மாலை அணிந்து வந்தாள் என்பதைக் கொண்டு, நோக்கினாள், மாலை பல பூக்களை உள்ளடக்கியது என்பதால் மாலையும் வண்ணான் தொழிலும் இப்பாடலின் வழி அறிந்து கொள்ளப்பட்ட கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"பூங்கண் ஆயம் ஊக்க ஊங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
..........................................................................
ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா"

இவ்வடிகளின் வழி, பரத்தையின் ஊடலைத் தணிக்க முடியாததால் தான் தலைவன் தலைவியைத் தேடி வந்துள்ளான் என்று தோழி கூறுவதிலிருந்து ஊடலே இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

### 3.9 100 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

முதற்பொருள் இப்பாடலின் இடம்பெறவில்லை.

- வெண்கடம்பு, ஆம்பல் மலர்கள் மட்டும் இரு பாடல்களில் இடம் பெற்றுள்ளன.
- வண்டு, குருகு, கொக்கு, ஆகியவை 30,70,100 ஆம் பாடல்களில் இடம்பெற்றள்ளன.
- உழவு, நிரைமேய்த்தல், வண்ணான் தொழிகள் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.
- யாழின் வகைகளில் ஒன்றான சீறியாழ் 30 ஆம் பாடலில் இடம் பெற்றுள்ளது.
- தலைமகளைக் குறிக்கும் மகிழ்ந, ஊரன், உழவன் என்ற பெயர்கள் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.
- மருத்திணைக்கு ஊடல் உரிப்பொருள் என்பதற்கு ஏற்ப தலைவன் தலைவி ஊடல் கொண்டுள்ளதை மெய்ப்பிக்கும் வண்ணம் பாடல்கள் அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், அகத்திணை இயல்,5
2. பொருநராற்றுப்படை, 168.
3. தொல்காப்பியம், அகத்திணை இயல்,6
4. குறுந்தொகை,22.
5. ஐங்குறுநூறு, இடைச்சுரத்துரைத்தபத்து. 3
6. குறுந்தொகை, 127.
7. மதுரைக்காஞ்சி,260.
8. திருக்குறள், 1091.

இயல் - 4



# நற்றிணை நெய்தல் திணைப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

## இயல் - நான்கு

## நற்றிணை நெய்தல் திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்

### 4.0 முன்னுரை

இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற நற்றிணைப் பாடல்களில் 22 பாடல்கள் நெய்தல் திணைக்கு உரியவை. இந்த 22 பாடல்களில் காணலாகும் முதல்,கரு, உரிப் பொருள்களைக் கண்டறிவது இந்த இயலின் நோக்கம் ஆகும். இங்கு, பாடல்களின் எண் வரிசை அடிப்படையில் கருத்துகள் விளக்கப்பெறுகின்றன.

### நெய்தல் திணை

மணல் சார்ந்த கடல் பகுதி இத்திணைக்கான நிலம் என்பதை இலக்கண நூல்கள் வழி அறிந்துகொள்ளமுடிகின்றது. மீன்வளமும், உப்பு வளமும் இந்நிலப்பகுதியை வளப்படுத்துகின்றன. தொல்காப்பியர்,

"வருணன் மேய பெருமணல் உலகமும்"[1]
"எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"[2]
"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்"[3]

என்று கூறப்பட்ட இவற்றில் 'இரங்கல்' நெய்தல் திணைக்குரிய உரிப்பொருளாகும்.

### 4.1 4 - ஆம் பாடல்

#### முதற்பொருள்

"கானல்அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்"

என்ற அடியில் கடல் பயின்றுவந்துள்ளதால், கடலே இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

#### கருப்பொருள்

"நீல்நிறப் புன்னைக் கொழுநிழல் அசைஇத்"

இவ்வடியில் புன்னை மரம் இடம் பெற்றுள்ளதிலிருந்து புன்னை

இப்பாடலின் மரம் குறித்த கருப்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

"தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி
அங்கண் அரில் வலை உணக்குந் துறைவனொடு
..........................................................
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்"

இவ்வடிகளில் 'கடல் பரப்பில் வலைவிரித்து என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து' மீன் பிடித்திருக்கின்றனர் என்பதையும் உப்பு என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து உப்பு விளைவித்திருக்கின்றனர். என்பதையும், அறிந்துகொள்ளமுடிகின்றன. எனவே இப்பாடலில் தொழில் சம்மந்தப்பட்ட கருப்பொருள் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

"மணல்மடுத்து உரறும் ஓசை கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉம்"

என்ற இவ்வடிகளில் வயலில் உள்ள நாரைகள் வண்டியின் சகட ஒலி கேட்டு அஞ்சும் என்று கூறப்பட்டுள்ளதில் இடம் பெற்றள்ள நாரையானது பறவை இனத்தைச் சார்ந்த கருப்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. அதே அடியில் வந்துள்ள கழனி என்ற சொல் மருத நிலத்திற்குரிய வயலைக் குறிக்கும். இச்செய்யுளில் பெரும் பான்மையான செய்திகள் கடல் பற்றியனவாக உள்ளன. ஆதலால் சிறுபான்மையான வயலை விடுத்துப் பெரும்பான்மையான கடலே இப்பாடலின் நிலம் என்று கருதப்படுகிறது.

**உரிப்பொருள்**

" ..................... உனக்குந் துறைவனொடு
அலரே, அன்னை அறியின் இவண் உறை வாழ்க்கை
அரிய வாகும் நமக்கெனக் கூறின்
கொண்டுஞ் செல்வர்கொல் தோழி?
.................................................................
இருங்கழி சேர்ப்பின்தம் உறைவுஇன் ஊர்க்கே"

என்ற அடிகளில், களவொழுக்கத்தில் தலைவனைச் சந்தித்துப் பேசுவதை அறிந்த மக்கள் பழிச் சொல்கூற, இச்சொல்லை அன்னை அறிந்தால் இல்லில் சிறைவைப் பால் என்று கூறுவதிலிருந்து இது ஏக்கம் சார்ந்த உரிப்பொருள் என்பதை அறியமுடிகின்றது.

### 4.2 11 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"புணரி பொருத பூமணல் அடைகரை
ஆழி மருங்கின்............................"

இவ்வடிகளில் புணரி, மணல், கரை, ஆழி என்ற சொற்கள் இடம் பெற்றுள்ளதிலிருந்து கடலே இப்பாடலின் முதற்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. இவ்வடியில் வந்துள்ள புணரி அலையைக் குறிக்கும். இதற்குச் சான்றாக,

"தேறுநீர் புணரியொடு யாறு தலைமணக்கும் - தெளிந்த கடலிற்றிரையோடே காவிரி தலைகலக்கும்"[4]

"நிலவு விரிந்தன்றாற் கான லானே"

என்ற அடியில் நிலவு ஒளியில் வரும் தலைவன், கூறப்பட்டுள்ளான். நிலவு இரவில் தோன்றும். ஆதலால், இப்பாடலின் பொழுது இரவு என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கருப்பொருள்**

"ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்பு ஆய்ந்து ஊர"

என்ற அடிகளில் சக்கரத்தில் நண்டு அடிபடாமல் வலவன் ஒட்டி வருகிறான் என்று கூறப்பட்டுள்ளதில், நண்டு பயின்று வந்துள்ளதை அறியமுடிகின்றது. நண்டை இப்பாடலில் அலவன் என்று புலவர் கூறியுள்ளார்.

"அலவன் சிறுமனை சிதையப் புணரி"[5]
"அளைவா ழலவன் கூருகிர் விரித்த"[6]

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகளில் அலவன் இடம் பெற்றுள்ளது

**உரிப்பொருள்**

"பெய்யாது வைகிய கோதை போல
மெய்சா யினையவர் செய்குறி பிழைப்ப"

இவ்வடிகளில் தலைவனை நினைத்து வருந்தியதால் தலைவி பூவை போல வாடியும், மெலிந்தும் காணப்படுகிறாள். என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து இப்பாடலின் உரிப்பொருள் இரங்கல் எனலாம்.

### 4.3 15 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"முழங்குதிரை கொழிஇய மூரி எக்கர்"

இவ்வடியில் முழங்குதிரை என்று கூறியுள்ளதிலிருந்து கடல் இப்பாடலின் நிலம் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

**கருப்பொருள்**

"................... உரவுநீர்ச் சேர்ப்பன்"

என்ற அடியில் சேர்ப்பன் என்று தலைமகன் பெயர் கூறப்பட்டுள்ளது. இதுவே இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"..................... எம் மொடு வந்த
நாணும் விட்டோம் அலர்க இவ்வூரே"

என்ற அடிகளில் நின்னொடு கொண்ட களவொழுக்கத்தால் இவ்வூர் தலைவியை அலர்தூற்றுகிறது. என்று தோழி கூறுவதிலிருந்து, தலைவியின், வருத்தத்தை மேம்படுத்தும் அலர் கூறப்பட்டுள்ளதால் இரங்கல் நிமித்தம் உரிப்பொருள் எனலாம்.

### 4.4 16 ஆம் பாடல்

**முதற்பொருள்**

"விழுநீர் வியலகந் தூணி யாக
எழுமான் அளக்கும் விழுநெதி பெறினுங்"

இவ்வடிகளில் வந்துள்ள ‘விழுநீர் வியலகம்’ என்பது நதிநீர், மழைநீர் போன்ற இவ்வுலகத்தில் உள்ள நீர் எல்லாம் கடலில் விழுவதால் விழுநீர் வியலகம் என்று கடலைப் புலவர் கூறியிருக்கலாம். எனவே கடல் சார்ந்த பகுதியே இப்பாடலின் நிலம் எனலாம்.

### கருப்பொருள்

“வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியில் ......................”

இவ்வடிகளில் பூ, பொய்கை, மீன் ஆகியவை பயின்றுவந்துள்ளதால், இவையே இப்பாடலின் கருப்பொருட்கள் எனலாம்.

### உரிப்பொருள்

“புணரின் புணராது பொருளே பொருள்வயின்
பிரியின் புணராது புணர்வே ஆயிடைச்”

என்ற அடிகளில் தலைவியைப் பிரிந்து சென்றால் தலைவி வருந்துவாள் ஆதலால் தலைவியுடன் தங்கப் போகிறேன் என்று தலைவன் தன் நெஞ்சிடம் கூறுவதாக அமைந்துள்ளது. இரங்கல் நிமித்தமே இப்பாடலின் உரிப்பொருள் என்று மீட்டுருவாக்கம் செய்யலாம்.

## 4.5 19 - ஆம் பாடல்

### முதற்பொருள்

“....................உரவு நீர்ச் சேர்ப்பன்”

என்ற அடியின் வழி இப்பாடலின் நிலம் கடல் சார்ந்த பகுதியே எனலாம்.

### கருப்பொருள்

“இறவுப் புறத்து அன்ன பிணர்படு தடவுமுதல்
சுறவுக்கோட்டு அன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புமுதிர்பு
நன்மான் உழையின் வேறுபடத் தோன்றி”

இவ்வடிகளில் புலவர் தாழைமரத்தை, இறால் மீனின் புறம் போன்ற தண்டினையும், சுறாமீனின் நீண்டுள்ள கொம்பு போன்ற முட்களையும் கொண்டுள்ளது என்று உவமையாகக் கூறியுள்ளார். தாழை மரத்தில் களிற்று யானையின் தந்தம் போல அரும்பு முதிர்ந்துள்ளது பெண்மான் தலைசாய்த்து நிற்பது போலத் தாழம்பூ மலர்ந்துள்ளது என்று உவமையாகக் கூறியுள்ளார். எனவே இப்பாடலில் சுறா, இறாமீனும், களிறு, மான் தாழைமரம் ஆகியவை கருப்பொருட்களாகும்.

" ...................... உரவுதீர்ச் சேர்ப்ப"

என்ற அடியில் சேர்ப்பன் என்று தலைமகன் பெயரைக் குறிக்கும் கருப்பொருள் இடம் பெற்றுள்ளது.

"இன்மணி நெடுந்தேர் பாகன்..............."

இவ்வடியில் நெடுந்தேர், பாகன் என்ற சொற்கள் இடம் பெற்றுள்ளதிலிருந்து, குதிரை பயன்படுத்தப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. எனவே குதிரை இப்பாடலில் நேரடியாக இடம்பெறாமல் மறைமுகமாக இடம்பெற்ற கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"வருவை யாகிய சின்னாள்
வாழா ளாதல்நற்குஅறிந்தனை சென்மே"

இவ்வடிகளில் நீ வரும் நாட்களில் தலைவி உயிர்வாழ மாட்டாள் என்று தோழி தலைவனிடம் கூறுவதிலிருந்து தலைவனின் பிரிவை நினைத்து வருந்துகிறாள் என்பது புலப்படுவதால், இரங்கல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.6 27 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"ஒழிதிரை வரித்த வெண்மணல் அடைகரைக்"

இவ்வடிகளில் திரை, மணல் என்ற கடல் சார்ந்த சொற்கள் இடம் பெற்றுள்ளதால், கடல் இப்பாடலின் நிலம் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**கருப்பொருள்**

"......................நெரு நல் பூவின்
நுண்தாது உறைக்கும வண்டினம் ஒப்பி
.......................................................................................
இறவு ஊர் இனக்குருகு ஒலிப்பச் சுறவம்
.......................................................................................
கண்போற் பூத்தமை கண்டு நுண்பல
சிறுபா சடைய நெய்தல்"

இவ்வடிகளில் வண்டு, குருகு, இறாமீன், நெய்தல் பூ ஆகியவை, இப்பாடலில் பயின்றுவந்துள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

இப்பாடலின் உரிப்பொருள் இன்னதென்று உய்த்துணர்ந்து கூறமுடியவில்லை.

**4.7 31 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

"பலவுறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்
.......................................................................................
உலவுத் திரை வெரூஉம்"

இவ்வடிகளின் வழி கடலும், இரவும் இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

**கருப்பொருள்**

"சேயிறா எறிந்த சிறுவெண்காக்கை
.......................................................................
............. பெடைக்குப் பயிரிடூச் சுரக்குஞ்
.......................................................................
நெடுஞ்சினைப் புன்னைகருஞ்சூல் வெண்குருகு
.......................................................................
உரவு நீர்ச் சேர்ப்ப னொடு ...................."

இவ்வடிகளில் காக்கை, மீன், புன்னை, குருகு, சேர்ப்பன் ஆகியவை இடம் பெற்றுள்ளன. இவை இப்பாடலின் கருப்பொருட்களாகும்.

***உரிப்பொருள்***

“பெரும்புலம் புற்ற நெஞ்சமொடு பலநினைந்து
யானும் இனையேன் ஆயினென் ஆனாது
.......................................................................
உரவுநீர்ச் சேர்பனொடு மணவா ஊங்கே”

இவ்வடிகளில் தலைவனொடு இருந்த போது பெற்ற இன்பத்தையும், அவன் பிரிந்த போது அடைந்த துன்பத்தையும், நினைத்துப் புலம்புவது இடம் பெற்றுள்ளது. ஆதலால் வருத்தத்தைப் புலப்படுத்தும் இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.8 35 - ஆம் பாடல்

***முதற்பொருள்***

“பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்”

இவ்வடியில் திரை, மணல், கரை என்று கடல் உள்ளடக்கிய பொருள்கள் இடம்பெற்றுள்ளதால் நிலம் கடல் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

***கருப்பொருள்***

“புன்கால் நாவற் பொதிப்புற இருங்கனி
கிளை செத்து மொய்த்த தும்பிபழஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண்ட கோள் கூர்ந்து
.......................................................................
இரைதேர் நாரை எய்தி விடுக்கும்”

இவ்வடிகளில், நாவல்மரம், அதன்கனி, தும்பி, அலவன் நாரை பயின்று வந்துள்ளன. ஆகவே இவை இப்பாடலில் இடம் பெற்றுள்ள கருப்பொருட்கள் எனலாம்.

***உரிப்பொருள்***

“காமம் கொல்இவள் கண்பசந் ததுவே”

இவ்வடியில் தலைவனை நினைத்து வருந்திய தலைவியின் கண் பசந்தன என்பதிலிருந்து, தலைவியின் வருத்தம் புலப்படுவதால், இரங்கல் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### 4.9 38 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்பம்

......................................................................

வெண்மணற் படப்பை எம் அழுங்கல் ஊரே"

இவ்வடிகளில் இடம் பெற்றுள்ள 'மணல்' கடலில் இருக்கக் கூடியதால், இப்பாடலில் இடம் பெற்ற நிலம் கடல் என்பதை அறியலாம்.

**கருப்பொருள்**

" .................. பரதவர் பகர

இரும்பனந் தீம்பிழி உண்போர் மகிழும்"

இவ்வடிகளில் பரதவர் பற்றியும், பனைமரத்தில் உள்ள கள்ளைப் பற்றியும் கூறுவதால் மீன்பிடித்தலும், கள் இறக்குதலும் தொழில்களாக அமைகின்றன. ஆக, மீன், கள், பனைமரம் ஆகியவை இப்பாடலில் இடம் பெற்ற கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"மெல்லம் புலம்பன் பிரியின் புல்லெனப்

புலம்பாகின்றே தோழி ......................."

இவ்வடிகளின், தலைவன் பிரிவால் வருந்தும் தலைவி என்று கூறப்பட்டுள்ளதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருளாகும்.

### 4.10 45 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு"

இவ்வடியில் கடல் இடம் பெற்றுள்ளதால், கடல் இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருள் என்பதை அறியமுடிகின்றது.

**கருப்பொருள்**

"மீன்எறி பரதவர் மகளே, நீயே
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க
.......................................................................
நிணச்சுறா அறுத்த உணக்கல்.............
இனப்புள் ........................................"

இவ்வடிகளில் மீன்பிடிக்கும் பரதவர் பற்றியும், கொடிகள் நிறைந்த ஊர் பற்றியும் சுறாமீனை உண்ணும் காகம் பற்றியும் கூறப்பட்டுள்ளன. புள் என்ற சொல் பறவையைக் குறிப்பதாகும். இப்பாடலில் வந்துள்ள புள் காகத்தைக் குறிப்பதாக உரையாசிரியர் குறிப்பிடுகின்றார். எனினும், வேறுபறவைகளும் மீனை உண்ணும் இயல்பின

ஆக, மீன்பிடித்தல், சுறா, காகம் இப்பாடலின் கருப் பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி
.............................................................
மீன்எறி பரதவர் மகளே, நீயே
.............................................................
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே"

இவ்வடிகளில் தலைவனின் செல்வச்செழிப்பையும், தலைவியின், பரதவர் குடியிருப்பையும் ஒப்பிட்டுக் கூறி, தலைவனைத் தோழி நீக்குவது குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடல்,

"பெருமையிற் பெயர்ப்பினும்............."[7]

எனும் நூற்பாவிற்குச் சான்றாக அமைகின்றது.

## 4.11 49 ஆம் பாடல்

**முதற்பொருள்**

"தெண்டற் சேர்ப்பன்வாழ் சிறுநல் லூர்க்கே"

இவ்வடியில் கடற்கரையை உடைய ஊரன் என்று கூறப்பட்டுள்ளதில், கடல் இடம் பெற்றுள்ளதால் கடல் சார்ந்த பகுதியே இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

***கருப்பொருள்***

"முடிவலை முகந்த முடங்கு இறாப் பாவைப்
படுபுள் ஒப்பலின் பகன்மாய்ந் தன்றே
கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டம் மடிந்து"

இவ்வடிகளில் மீன்பிடித்தொழில், இறாமீன், காகம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. எனவே இவைகளே கருப்பொருளாக இவ்வடிகளில் பயின்று வந்துள்ளன எனலாம்,

"மறைப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழும்
................. சேர்ப்பன் வாழ் சிறுநல் லூர்க்கே"

இவ்வடிகளில் புன்னை, தாழை மலர்கள் கமழும் கடற்கரைடைய உடைய சேர்ப்பன் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றில், புன்னை, தாழை, சேர்ப்பன் ஆகியவை கருப்பொருளாக வந்துள்ளன என்பதை அறியமுடிகின்றது. இங்குக் குறிப்பிடப்பட்ட தாழை வெண்மை நிற மலரினை உடையது என்பதற்குச் சான்றாக,

"வெள்வீத் தாழைத் திரை அலை"[7]
"தங்குதிரை பொருத தாழை வெண்பூக்"[8]
"தாழை அன்னம் பூப்பவும்"[9]

இவ்வடிகள் அமைகின்றன.

***உரிப்பொருள்***

"படுபுள் ஒப்பலின் பகன்மாய்ந் தன்றே
.................................................................................
எமரும் அல்கினர் ஏமார்ந் தனமெனச்
சென்று நாம் அறியின் எவனோ தோழி"

இவ்வடிகளில் தலைவி, தலைவனை இரவில் சந்திக்க இவ்இரவு பொழுதே ஏற்றது, ஆதலால் தலைவனிடம் சென்று கூறினாள் என்ன? என்ற தோழி கூற்று இப்பாடலின் அமைந்துள்ளது. இவற்றிலிருந்து தலைவியின் வருத்தத்தை உணர்ந்ததால் தான் தலைவனைச் சந்திக்க வழி கூறுகிறாள் என்பது புலப்படுவதால் இரங்கல் நிமித்தம் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.12 54 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"தெண்திரை மணிப்புறந் தைவரும்"

இவ்வடியில் வந்துள்ள 'திரை' கடல் அலையைக் குறிப்பதால், கடல் பயின்றுவந்துள்ளதை அறியமுடிகிறது. எனவே கடல் இப்பாடலில் இடம் பெற்றுள்ள நிலம் குறித்த முதற்பொருள் எனலாம்.

" ........... சிறுபுன் மாலை"

என்ற அடியில் வந்துள்ள 'சிறுபுன் மாலை' என்பது சிறுபொழுதாகிய மாலை இப்பாடலில் பயின்றுவந்துள்ள பொழுதாகும்,

"பெரும்பெயல் பொழிந்த சிறுபுன்மாலை"[11]

என்ற பாடல் அடியிலும் சிறுபுன் மாலை என்று மாலைப் பொழுது குறிப்பிடப்பட்டுள்ளது.

### கருப்பொருள்

"கருங்கால் வெண்குருகு ................."

என்ற அடிகளில் கரியகாலை உடைய நாரை குறிப்பிடப்பட்டுள்ளது

"கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்
..........................................................................
கண்டல் வேலிநும் துறை கிழவோற்கே"

இவ்வடிகளில் ஞாழல், கண்டல் மரங்கள் இடம் பெற்றுள்ளன. இம்மரங்கள் கடற்கரைப் பரப்பான நெய்தல் நிலத்திலேயே மிகுதியாகக் காணப்படும் என்பதை,

குறுந்தொகை - ஞாழல் -81,310,318,328,397

குறுந்தொகை - கண்டல் - 117,340

ஆகிய நெய்தல் திணைப் பாடல்களில் இம்மரங்கள் இடம் பெற்றுள்ளதன்வழியும் அறியமுடிகின்றது.

***உரிப்பொருள்***

"கருங்கால் வெண்குருகு எனவ கேண்மதி
பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை
அதுநீ அறியின் அன்புமார் உடையை
நொதுமல் நெஞ்சம் கொள்ளாது என்குறை
இற்றாங்கு உணர உரைமதி ...............
.........................................................................
.............. துறைகிழ வோற்கே"

இவ்வடிகளில் தலைவனிடம் சென்று, என்நிலையை எடுத்துக் கூறு, என்று நாரையிடம் தலைவி கூறுவதிலிருந்து, வருந்தி இருக்கும் தலைவியின் நிலை அறியப்படுகிறது. எனவே இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.13 58 - ஆம் பாடல்

### முதற்பொருள்

" .............. உயர்திரை
நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்"

இவ்வடிகளில் பயின்றுவந்துள்ள திரை, துறை என்ற சொற்களில் இருந்தே இப்பாடலின் நிலம் கடல் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

"..........................................மாலை விளக்கின்"

இவ்வடியில் வந்துள்ள 'மாலை', பொழுதைக் குறிப்பதாகும். எனவே, இப்பாடலின் பொழுது மாலை என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

**கருப்பொருள்**

"சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்"

இவ்வடியில் செவ்வரிப்பறை கருப்பொருளாகப் பயின்று வந்துள்ளது.

"...............................................குரீஇப் போலக்"

என்ற அடியில் வந்துள்ள 'குரீஇ' என்பது குருவியைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

"........................................பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுதேர் நுண்முகம் நுழைத்த மாவே"

என்ற அடிகளில் சேர்ப்பன், மா என்ற இரண்டு சொற்கள் பயின்றுவந்துள்ளன. இவற்றில் சேர்ப்பன் என்பது தலைமகன் பெயரையும், மா என்பது குதிரையான விலங்கினப் பெயரையும் குறிக்கும் கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"அவல நெஞ்சினம் பெயர........................"

என்ற அடியின் வழி வருந்துவது புலப்படுகின்றது. ஆதலால் இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள்

### 4.14 63 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்"

இவ்வடியில் வந்துள்ள கடல் இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருளாகும்.

**கருப்பொருள்**

"....................................பெருவலைப் பரதவர்"
மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்"

இவ்வடிகளில் மீன்பிடித்தொழிலில் ஈடுபடும் பரதவர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் தொழில் மீன்பிடித்தல் என்பதும் மீன் உணவாகப் பயன்பட்டிருக்கின்றது என்பதும் அறிந்துகொள்ள முடிகின்றன.

"..................................புலவல் புன்னை
விழவு நாறு விளங்குஇணர் விரித்துடன் கமழும்"

இவ்வடிகளில் புன்னையுடன் சேர்ந்த புலவும் நாறுகின்றது என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து புன்னை மரம் கடல் ஓரங்களின் இருந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது.

"மலிதிரைச் சேர்ப்பனொடு......................"

என்ற அடியில் சேர்ப்பன் என்று தலைமகன் பெயர் கூறப்பட்டிருக்கின்றது. ஆக மீன், இவுளி (குதிரை) புன்னை, சேர்ப்பன் இப்பாடலில் கருப்பொருளாகப் பயின்றுவந்துள்ளன.

**உரிப்பொருள்**

"பசலையாகி விளிவது கொல்லோ"

என்ற அடியில் பசலை என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து தலைவனை நினைத்து வருந்திய தலைவிக்குப் பசலை ஏற்பட்டுள்ளது. என்பதை அறிந்து கொள்ள முடிவதால் வருத்த மிகுதி தலைவிக்கு இருந்துள்ளது என்பது புலப்படுவதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.15 67 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"உடைகடற் படப்பைஎம் உறைவு இன் ஊர்க்கே"

இவ்வடியில் கடல் பயின்று வந்துள்ளதால் இப்பாடலின் முதற்பொருள் கடல் எனலாம்.

"........................................செழுங்கதிர் மண்டிலம்
மால்வரை மறையத் ........................................"

என்ற அடிகளில் புலவர் கதிரவன் மலையில் சென்று மறைந்தது என்று கூறி, இரவு வந்ததைப் புலப்படுத்துவதற்காக மலையைப் இப்பாடலில் கூறியிருக்கிறார், இவற்றிலிருந்து மலை இப்பாடலின் நிலம் அல்ல எதையும் பொழுது, இரவு என்பதையும் அறியலாம்.

***கருப்பொருள்***

"இறஅருந்தி எழுந்த கருங்கால் வெண்குருகு

.........................................................................

கருங்கோட்டுப் புன்னை.......................................

.........................................................................

துணைச் சுறா வழங்கலும்......................................."

இவ்வடிகளில் இறாமீன்களைத் தின்று குருகு புன்னை மரத்தில் அமர்ந்துள்ளது என்றும். சுறா மீன் பற்றியும் கூறப்பட்டுள்ளதிலிருந்து, சுறா, இறாமீன்களும், புன்னையும் இப்பாடலின் கருப்பொருட்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றன.

***உரிப்பொருள்***

"எல்இமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர் அதனால்
தங்கின் எவனோ......................................."

இவ்வடிகளில் எல்லோரும் கடலுக்குச் சென்றுவிட்டனர். நீ இங்குத் தங்கின் என்ன? என்று தோழி தலைவனிடம கேட்கிறாள் என்பது இப்பாடலின் வழிப்புலப்படுவதால், தலைவன் களவில் தலைவியைச் சந்திக்கிறான் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது. தலைவன், தலைவியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காகவே தோழி அவ்வாறு கூறுகிறாள் என்பது புலப்படுகின்றது. தலைவியைக் களவில் சந்தித்து விட்டு வரைந்து கொள்ள நாட்கடத்துவதும் தலைவிக்கு வருத்தத்தை மேம்படுத்தும் என்பதால், இதன் உரிப்பொருள் இரங்கல் என்றே கருதலாம்.

## 4.16 72. ஆம் பாடல்

### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருளுக்குரிய நிலம், பொழுது தொடர்பான செய்திகள் இடம்பெறவில்லை.

### கருப்பொருள்

கருப்பொருள் தொடர்பான செய்திகளும் இப்பாடலில் இடம் பெறவில்லை.

### உரிப்பொருள்

"புலர்வது கொல் அவன் நட்புஎனா
அஞ்சுவல் தோழி என் நெஞ்சத்தானே"

இவ்வடிகளில், தலைவன் விலகிச் செல்வதால் அவன் நட்புத் தேய்ந்துவிடுமோ, என்று அஞ்சுகிறேன் தோழி என்று தலைவி கூறுவதிலிருந்தே, வருத்தம் புலப்படுவதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 4.17 74 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"சிறுவீஞாழற் பெருங்கடற் சேர்ப்பனை
...................................................................................
..............................ஆர்க்குந் தெண்கடல்"

இவ்வடிகளில் கடல் இடம் பெற்றுள்ளதை அறிந்துகொள்ள முடிவதால் இவையே இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

### கருப்பொருள்

"............................................பெருவலை
இடிக்குரல் புணரிய் பெயவத்து இடுமார்"

என்று கூறப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து மீன்பிடித் தொழிலில் இந்நில மக்கள் ஈடுபட்டுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

"சிறுவீ ஞாழல் பெருங்கடற் சேர்ப்பனை

..................................................................................

புதுமணற் கானல் புன்னை நுண்தாது

..................................................தூக்கு தொறுங்குருகின்

..................................................................................

கண்டல் வேலிய ஊர்...................."

இவ்வடிகளில், ஞாழல், புன்னை, கண்டல் மரங்களும், குருகும், சேர்ப்பன் என்ற தலைமகன் பெயரும் இடம் பெற்றுள்ளன. எனவே இவைகளே இப்பாடலின் கருப்பொருட்கள் என்பதை அறியமுடிகின்றது.

***உரிப்பொருள்***

"கண்டல் வேலிய ஊர் அவன்

பெண்டு என அறிந்தன்று பெயர்தலோ அரிது"

என்ற இவ்வடிகளில், பாணனிடம் தலைவி, பரத்தையே தலைவனின் மனக்கிழத்தி என்று இவ்வூர் கூறுவதால் நான் அவனுக்கு மனக்கிழத்தி ஆகமுடியாது என்று கூறுவதிலிருந்து, தலைவியின் வருத்தத்தை அறியமுடிகின்றது. எனவே இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### 4.18 78 - ஆம் பாடல்

***முதற்பொருள்***

"கோள்சுறா வழங்கும் வாள்கேழ் இருங்கழி"

இவ்வடியில் வந்துள்ள இருங்கழி என்ற சொல் உப்பங்கழியைக் குறிக்கும். உப்பங்கழி கடற்கரைப் பகுதியில் அமைவதால் இப்பாடலின் நிலம் குறித்த முதற்பொருள் கடல் எனலாம்.

"................................................சுடர்செல் மாலை"

என்ற அடியில் மாலைப் பொழுது இடம் பெற்றுள்ளது.

**கருப்பொருள்**

"கோள்சுறா வழங்கும்............................

................................................கலிமா

வலவன் கோலுற அறியா"

இவ்வடிகளில், சுறாமீன், கலிமா என்ற இரண்டும் பயின்றுவந்துள்ளன. இவற்றில் கலிமா என்பது குதிரையைக் குறிக்கும் எனவே சுறாவும், குதிரையும் இப்பாடலின் விலங்கு குறித்த கருப்பொருள்கள் எனலாம்.

"...............................இருங்கழி

மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்

பொன்நேர் நுண்தாது புன்னைதாஅம்

வீழ்தாள் தாழைப் பூக்கழல்கானல்"

இவ்வடிகளில் நெய்தல், புன்னை, தாழை ஆகிய மரங்கள் இடம் பெற்றுள்ளன. உப்பங்கழிப்பற்றி இப்பாடலில் கூறப்பட்டுள்ளதால் உப்பு விளைவித்தல் இப்பாடலில் இடம்பெற்றுள்ள தொழில் எனலாம்.

"உரவுநீர்ச் சேர்ப்பன்..............................."

என்ற அடியில் வந்துள்ள சேர்ப்பன் தலைமகன் பெயரைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

இப்பாடலில், தலைவன் நின்னைத் திருமணம் செய்துகொள்ள வருகிறான் என்று, தோழி, தலைவியின் ஆற்றாமையை நீக்க அவ்வாறு கூறுவதாக அமைவதால் இப்பாடலின் உரிப்பொருள் இரங்கல் எனலாம்.

## 4.19 87ஆம் பாடல்

**முதற்பொருள்**

"துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்"

இவ்வடியில் வந்துள்ள துறை என்ற சொல் கடலைக் குறிப்பதால் கடல் சார்ந்த பகுதியே இப்பாடலின் நிலம் என்பதை அறியாலம்.

**கருப்பொருள்**

"..........................முள்எயிற்று வாவல்

ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்"

இவ்வடிகளில் வௌவால் தூங்கும் பொழுது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வௌவால் உறங்கும் பொழுது பகல் ஆதலால், இப்பாடலின் பொழுது பகல் என்பதை நன்கு அறிந்து கொள்ளமுடிகின்றது.

"நெல்லியம் புளிச்சுவை....................................

..................................................................................

பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை"

இவ்வடிகளில் நெல்லி, புன்னை மரங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளதால் இவையே இப்பாடலின் கருப்பொருள் என்பதை அறியலாம்.

**உரிப்பொருள்**

"சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்

பெருந்தண் கானலும் நினைந்த அப்பகலே"

என்ற அடிகளில், தலைவனையும், குளிர்ச்சிப் பொருந்திய கானலையும் என் பகல் கனவில் கண்டேன் என்பதிலிருந்து, தலைவி தலைவனைப் பிரிந்து வருந்தி இருக்கிறாள் என்பது புலப்படுவதால் இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்,

## 4.20 91ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பாடு இமிழ் பனிக்கடல் நுழைஇப் பெடையோடு"

இவ்வடியில் 'கடல்' என்ற சொல் பயின்றுவந்துள்ளதிலிருந்து இப்பாடல் கடல் சார்ந்த நிலத்தை முதற்பொருளாகக் கொண்டுள்ளது என்பதை அறியமுடிகின்றது.

"......................................பகல் இவண் வரவே"

என்ற அடியில் பகலில் தலைவன் வருகிறான் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து, பகல் பொழுது இப்பாடலில் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

**கருப்பொருள்**

"புன்னை பூத்த இனநிழல் உயர்கரைப்
பாடுஇமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கு இரை தேடும் தடந்தாள் நாரை
ஐயசிறுகண் செங்கடைச் சிறுமீன்
..................................................................
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்"

இவ்வடிகளில் புன்னை பூத்திருக்கும் கடற்கரையில் உள்ள மீனைப் பிடித்து, நாரை தன் பிள்ளைக்குக் கொடுக்கும் என்ற செய்தி இடம் பெற்றுள்ளது. இவற்றிலிருந்து புன்னை, நாரை, மீன் ஆகியவை இப்பாடலில் பயின்றுவந்துள்ளதை அறியமுடிகின்றது.

"புள்ளுயிர்க் கொட்பின் வள்ளுயிர் மணித்தார்க்
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீச் சேர்ப்பன்...................."

இவ்வடிகளில் பறவையின் ஒலியைப் போன்று மணிக் கட்டப்பட்ட குதிரையின் ஒலி என்றும் குதிரை கட்டப்பட்ட தேரில் சேர்ப்பன் வருகிறான் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆக, குதிரை, சேர்ப்பன், ஆகியவை கருப்பொருள்களாகப் பயின்று வந்துள்ளதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

**உரிப்பொருள்**

"நீயுணர்ந் தனையே? தோழி வீயுகப்
.........................................................................
கடுமாப் பூண்ட நெடுந்தேர்
நெடுநீர்ச் சேர்ப்பன் பகல் இவண் வரவே"

இவ்வடிகளில் மணிகட்டப்பட்ட தேரில் தலைவன் வருகிறான் என்று தோழி தலைவியிடம் கூறுவதிலிருந்து, தலைவனை நினைத்து வருந்தும் தலைவியின் மீது இரக்கம் கொண்டு தோழி ஆற்றுகிறாள் என்பதை அறிந்து கொள்ள முடிவதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### 4.21 94 - ஆம்பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை.

**கருப்பொருள்**

"புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்"

இவ்வடியில் புன்னை மரம்பற்றியும் சேர்ப்பன் என்று தலைமகன் பெயரும் கூறப்பட்டுள்ளதால் இவையே இப்பாடலின் கருப்பொருள்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**உரிப்பொருள்**

"என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வமுடையராகி
மார்பு அணங்கு உறுநரை அறியா தோனே"

இவ்வடிகளில் தலைவி, அவனால் வருத்த முற்ற என்னை அறிந்து கொள்ளாமல் இருக்கிறானே, என்ன மகன் இவன் என்று கூறுவதிலிருந்து வருத்தம் புலப்படுவதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### 4.22 96 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பொம்மல் படுதிரை நம்மொடு ஆடிப்"

இவ்வடியில் 'திரை' என்ற சொல் பயின்று வந்துள்ளதிலிருந்து இப்பாடலின் நிலம்கடல் என்பதை அறியலாம்.

### கருப்பொருள்

"இதுவே, நறுவீஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை தணைந்த வெண்மணல் ஒருசிறைப்
........................................................................................
கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்"

இவ்வடிகளில் ஞாழல், புன்னை, நெய்தல் ஆகிய மரங்கள் இடம்பெற்றுள்ளதால் இவைகளே இப்பாடலின் மரம் குறித்த கருப்பொருள் எனலாம்.

### உரிப்பொருள்

"..............................................நெய்தல்
அம்பகை நெறித்தழை அணிபெறக் தைஇத்
தமியர் சென்ற கானல் என்றாங்கு
உள்ளுதோறு உள்ளுதோறு உருகிப்
பைஇப் பையப் பசந்தனை பசப்பே"

இவ்வடிகளில், "தமியர் சென்ற கானல்" என்ற அடியில் வந்துள்ள 'சென்ற' என்பது இறந்த கால நிகழ்வைக் குறிக்கிறது. இவற்றிலிருந்து தலைவன் பிரிந்திருப்பதும் அதனால் தலைவி வருந்துவதும், புலப்படுவதால், இரங்கலே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

### தொகுப்புரை

இந்த இயல்வழி அறியலாகும் கருத்துக்கள் வருமாறு

- ❖ நெய்தல் திணையின் முதற்பொருளான கடல் இரண்டு பாடல் தவிர எல்லாப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. இரவு, மாலை பொழுதுகள் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. 87,91 ஆம் பாடலில் பகல் என்று பொழுது கூறப்பட்டுள்ளது.
- ❖ இத்திணையில் இறா, சுறாமீன்கள் மிகுதியான பாடல்களின் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. குதிரையும் மிகுதியான பாடல்களில் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

- நண்டு, அலவன் என்ற சொல்லாட்சியில் 11,35 ஆம் பாடல்களில் இடம்பெற்றுள்ளதை அறியலாம்.

- புன்னை, தாழை, ஞாழல், நெய்தல் , நாவல், பனை, நெல்லி,கண்டல் ஆகிய மரங்கள் இத்திணையில் இடம்பெற்றுள்ளன. இவற்றின் புன்னை மரமும், தாழை மரமும் மிகுதியான பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

- குருகு, வண்டு, குருவி, காகம் ஆகிய பறவைகளும், மீன் பிடித்தல் உப்பு விளைத்தல் ஆகிய தொழில்களும் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. சேர்ப்பன் என்று தலைமகனைக் குறிப்பிடுவது மிகுதியான பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

- இத்திணைக்குரிய உரிப்பொருள் 22 பாடல்களிலும் மறைமுகமாகவும், நேரடியாகவும் அறியும் வகையில் இடம் பெற்றுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம், அகத்திணை இயல்,5.
2. மேலது,10.
3. மேலது,16,
4. பட்டினப்பாலை,97.
5. குறுந்தொகை,328.
6. மேலது, 351.
7. தொல்காப்பியம், களவியல்,24.
8. குறுந்தொகை,163.
9. மேலது,224.
10. சிறுபாணாற்றுப்படை,146.
11. முல்லைப்பாட்டு,6.

இயல் - 5



# நற்றிணைப் பாலைத் திணைப்பாடல்களில் முதல், கரு, உரிப்பொருள்கள்

# இயல் - ஐந்து

# நற்றிணைப் பாலைத்திணைப் பாடல்களில் முதல், கரு உரிப்பொருள்கள்

## 5.0 முன்னுரை

இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற நற்றிணைப் பாடல்களில் 29 பாடல்கள் பாலைத்திணைக்கு உரியவை. இந்த 29 பாடல்களிலும் காணலாகும் முதல், கரு, உரிப்பொருள்களைக் கண்டறிவது இந்த இயலின் நோக்கம். இங்கு, பாடல்களின் எண் வரிசை அடிப்படையில் கருத்துக்கள் விளக்கப்பெறுகின்றன.

### பாலைத்திணை

தொல்காப்பியர் இத்திணைக்கு நிலம் கூறவில்லை

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[1]

இந்நூற்பாவில் நான்கு திணைக்கு நிலம் கூறிப்பாலைக்கு நிலம் கூறவில்லை. "பாலைத் தன்மையாவது காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச் சோலை தேம்பிக் கூவல் மாறி நீரும் நிழலுமின்றி நிலம் பயந்துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது"[2]. அகத்திணையியலில் பாலை என்ற சொல்லையே தொல்காப்பியர் பயன்படுத்தவில்லை. 'நடுவண் ஐந்திணை' என்றே பாலையைக் கூறுகிறார் அந்நூற்பா,

"அவற்றுள்
நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்தியப் பண்பே"[3]

பாலை என்ற திணையின் பெயரைப் புறத்திணை இயலில் குறிப்பிட்டுள்ளார். அந்நூற்பா,

"வாகை தானே பாலையது புறனே"[4]

அகத்திணை இயலில்

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலோடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[5]

பொழுதைக் குறிப்பிடும் போதும் பாலையை நடுவுநிலைத் திணை என்றே குறிப்பிட்டுள்ளார். ஐந்திணைக்கு உரிப்பொருள் கூறும் போதும் பாலைத் திணையைக் கூறவில்லை. உரையாசிரியர்கள் புறத்திணையியலில் குறிப்பிடப்பட்ட பாலையை வைத்தே நடுவண் ஐந்திணை என்பது பாலையைக் குறிக்கும் என்பதைக் கண்டு அறிந்திருக்கின்றனர்.

சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் பாலை நில இயல்பைக் கூறுகிறார்.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல்பு இழந்து, நடுங்கு துயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"[6]

இவ்வடிகளில் முல்லையும், குறிஞ்சியும் தன் இயல்பு இழந்து காணப்படுவதே பாலை என்கிறார்.

"காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழி"[7]

என்ற அடிகளிலும் பாலை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"நிழலுரு விழந்த வேனிற் குன்றத்துப்
பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார்"[8]

இத்திணையின் பொழுது நண்பகல் இளவேனில், முதுவேனில் என்று கூறி பின்பனியும் இதற்குரிய பொழுது என்று கூறுகிறார்.

“பின்பனி தானும் உரித்தென மொழிபே”[9]

பிரிதல் பாலை திணையின் உரிப்பொருள் என்று இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது.

“இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்
உரியதாகும் என்மனார் புலவர்”[10]

“இருவகைப் பிரிவான தலைமகளைப் பிரிதலும் தலைமகள உடன்கொண்டு தமர்வரைப் பிரிதலும்”[11] என்று அப்பிரிதல் விளக்கம் பெற்றுள்ளது.

### 5.1 2 - ஆம் பாடல்

#### முதற்பொருள்

“அழுந்துபட வீழ்ந்தண் குன்றத்து
ஒலிவல் ஈந்தின் உலவைஅம் காட்டு
..................................................................
மரல் நோக்கும் இண்டுஇவர் ஈங்கைய சுரனே
..................................................................
மால்வரை மிளரிக்கும் உருமினும் கொடிதே”

இவ்வடிகளில் குறிஞ்சித்திணைநிலமும், முல்லைத்திணை நிலமுமான மலையும், காடும் பயின்றுவந்துள்ளன. இவற்றிலிருந்து, திரிந்த வெப்பமான நிலமே பாலையின் நிலம் எனலாம்.

“எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்” இவ்வடியில் வந்துள்ள எல்லி என்ற சொல் இரவைக் குறிக்கும் இரவு நேரத்தில் தலைவியை அழைத்துச் சென்றுள்ள தலைவன் என்ற பொருண்மையுடன் வந்துள்ளது. இதன் வழி இரவே இப்பாடலின் பொழுது என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

“.......................................................... மாலை”

இவ்வடியில் மாலை பொழுது பற்றிக் கூறப்பட்டுள்ளதால் மாலையும் இப்பாடலின் பொழுது என்பதை அறியமுடிகிறது.

### கருப்பொருள்

"ஒலிவல் ஈந்தின் உலவை அம்காட்டு

..............................................................................

வல்லியம் பெருந்தலைக் குருளைமாலை

மரல்நோக்கும் இண்டு இவர் ஈங்கைய சுரனே"

இவ்வடிகளில் ஈத்த மரங்கள் நிறைந்த காடு என்று கூறப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து ஈத்த மரங்கள் இருந்ததை அறிந்துகொள்ளமுடிகின்றது வல்லியம் குருளை எனப்பெறும் புலிக்குட்டி மரல் கொடியை நோக்கும் என்று கூறப்பட்டுள்ளது. எனவே இவற்றிலிருந்து மரல் கொடி, புலி இவைகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளதை அறியமுடிவதால் ஈத்தமரம், புலி, மரல்கொடி ஆகியவற்றை கருப்பொருள்கள் எனலாம்.

### உரிப்பொருள்

"வைபெயிற்று ஐயள் மடந்தை முன்னுற்று

எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்"

இவ்வடிகளின் வழித்தலைவன் தலைவியுடன் தமர்வரை விட்டுப் பிரிந்து சென்றுள்ளான் என்பதைக் கண்டோரின் கூற்றின் மூலம் அறிந்து கொள்ளமுடிகின்றது. ஆக இப்பாடலின் உரிப்பொருள் பிரிதல் எனலாம்.

## 5.2 3 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"சுரன்முதல் வத்த உரன்மாய் மாலை"

இவ்வடியில் பயின்று வந்துள்ள சுரன் என்ற சொல் காட்டைக் குறிப்பதால் பாலை நிலம் இதன் முதற்பொருள் என்பதை அறியலாம்.

"...........................................உரன்மாய் மாலை

..............................................................................

மனைமாண் சுடரொடு............................"

இவ்வடிகளில் மாலைப் பொழுதும், இரவும் கூறப்பட்டுள்ளன. இரவுப் பொழுது மறைமுகமாக இப்பாடலில் பயின்றுவந்துள்ளது. சுடரொடு

என்பது விளக்கின் தீபத்தைக் குறிப்பதாகும் தலைவி விளக்கு ஏற்றிக் காத்திருப்பாள் என்று இப்பாடலில் கூறப்பட்டுள்ளதால், விளக்கேற்றும் பொழுதான இரவைக் குறிப்பதாகக் கொள்ளாம்.

***கருப்பொருள்***

"பொரியரை வேம்பின் புள்ளிநீழல்

.......................................................................................

..............................................நெல்லிவட்டு ஆடும்"

இவ்வடிகளில் வேப்பமரமும், நெல்லிமரமும் கூறப்பட்டுள்ளன. நெல்லிக்காயைக் கொண்டு வட்டு ஆடியிருக்கின்றனர் என்பதிலிருந்து நெல்லிமரங்கள் இந்நிலத்தில் இருந்திருக்கின்றன.

"ஈன்பருந்து உயவும்..................."

என்ற அடியில் பருந்து பற்றிக் கூறப்பட்டுள்ளதால் பருந்து இப்பாடலில் இடம் பெற்ற கருப்பொருள் எனலாம்.

"வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்"

இவ்வடியில் வந்துள்ள 'வில்லேர் உழவர்' என்ற சொல் "பாலை நிலத்துச் செல்வோரைக் கொன்று வாழ்பவர் குடியிருக்கும் ஊர்"[12] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

"வினைமுடித் தன்ன இனியோள்"

என்ற அடியில் வினைமுடித்துக் காத்திருக்கும் தலைவி கூறப்பட்டுள்ளாள். வினை என்ற சொல்லுக்குக் குறிப்பிட்ட தொழிலைச் சுட்டிக் குறிப்பிட இயலவில்லை. பொதுநிலையில் இல்லப்பணிகளை முடித்தவள் என்றே குறிப்பிடலாம்.

***உரிப்பொருள்***

"உள்ளினன் அல்லெனோ யானே.................."

இவ்வடி மீண்டும் பிரியநினைத்தேனே என்று தலைவன் கூறுவதாக அமைகின்றது. எனவே பிரிவினால் தலைவி வருந்துவதை நினைக்கும் தலைவனைப் பற்றிய பாடலாகும். இப்பாடல்,

"நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே"[13]

என்ற நூற்பாவிற்கு ஏற்ப அமைந்துள்ளது

## 5.3 7 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்பக்

.........................................................................

சிறியிலைச் சந்தின வாடுபெருங்காட்டே"

இவ்வடியில் வரை, அருவி பற்றிக் கூறப்பட்டுள்ளதும், சந்தன மரம் வாழும் காடு என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து பாலை நிலம் என்பதை அறியலாம்.

**கருப்பொருள்**

"......................சுனைநீர் மல்க

............................அருவி ஆர்ப்பக்

கல் அலைத்து இழிதருங் கடுவரல் கான்யாறு

..................................................................

வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை

சிறியிலைச் சந்தின வாடுபெருங்காட்டே"

இவ்வடிகளில், சுனை, கான்யாறு, அருவி, யானை, சந்தன மரம் ஆகியவை இப்பாடலில் கருப்பொருட்களாக இடம்பெற்றுள்ளன.

**உரிப்பொருள்**

"இன்னே பெய்ய மின்னுமால் தோழி"

இவ்வடி மழைபெய்யும் கார்காலம் வந்துவிட்டதால் தலைவன் வந்துவிடுவான் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளதிலிருந்து, தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்திருப்பதை அறியமுடிகின்றது.

## 5.4 9 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"நறுந்தண் பொழில் கானம்
குறும்பல் ஊரயாம் செல்லும் ஆறே"

இவ்வடிகளில் சோலைகளை உடைய கானக வழி கூறப்பட்டுள்ளதால், கானகத்தையே நிலமாகக் கொள்ளலாம்.

### கருப்பொருள்

"வழிபடும் தெய்வம்............................"

என்ற அடியில் தெய்வம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. தெய்வத்தின் பெயர் கூறவில்லை.

"....................................மகிழ்குயில் ஆலும்"

என்ற அடியில் குயில் கருப்பொருளாகப் பயன்றுவந்துள்ளது.

### உரிப்பொருள்

"நிழல்காண் தோறும் நெடிய வைகி
மணல் காண்தோறும் வண்டல் தைஇ
வருந்தாது ஏகுமதி வாலெயிற்றோயே"

இவ்வடிகளில் இருந்து தலைவனும் தலைவியும் உடன்போக்குப் போவதை அறியமுடிகிறது. எனவே தமர்வரைப் பிரிந்து செல்லுதல் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

## 5.5 10 - ஆம் பாடல்

### முதற்பொருள்

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை

### கருப்பொருள்

"வெண்கோட்டு யானை.........................."

இவ்வடியில் யானை பற்றிக் கூறப்பட்டுள்ளதால் யானையே இப்பாடலின் கருப்பொருள் எனலாம்.

**உரிப்பொருள்**

"நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர"

இவ்வடிகளில் தலைவனிடம் தோழி நரைத் தோன்றினாலும் தலைவியை விட்டு நீங்காமல் காக்க வேண்டும் என்பதிலிருந்து. தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொண்டுள்ளதாக அல்லது மணவாழ்வு மேற்கொள்ளவதாகக் கருதலாம். எனவே, இவை தமர்வரை விட்டுப் பிரியும், பிரிதல் உரிப்பொருள் எனலாம்.

**வரலாற்றுச் செய்திகள்**

கொங்கர், பழையன் பற்றிய செய்திகள் இப்பாடலில் இடம் பெற்றுள்ளன.

## 5.6 12 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் குறித்த நிலம் இடம் பெறவில்லை. பொழுது விடியல் என்பதையும் பாடலின் வழி அறியலாம்.

**கருப்பொருள்**

"விளம்பழம் கமழும் மகஞ்சூல் குழிசிப்
..........................................................................
..................................ஆயத் தோரென"

இவ்வடிகளில் விளம்பழம் இடம்பெற்றுள்ளது. ஆயத்தார் என்று நிரைமேய்ப்பவர் இடம் பெற்றுள்ளதால், நிரைமேய்த்தல் தொழில் என்பதை அறியமுடிகின்றது. இவையே இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"வரியுனை பந்தொடு வைஇய செல்வோன்
இவைகாண்தோறும் நோவர் மாதோ
அளியரோ அளியரென் ஆயத்தோரென
நும்மொடு வரவுதான் அயரவும்
தன்வரைத்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே"

இவ்வடிகளின் வழித் தலைவனுடன் உடன்போக்கும் போனால் தோழியர்வருந்துவர் என்று தலைவி உடன்போக மறுக்கிறாள் இதனால் தலைவன் மட்டும் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லப்போகிறான் என்பதை அறியமுடிகின்றது. இப்பாடல்

"நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்"[14]

என்ற நூற்பாவின் கருத்திற்கு ஏற்றபடி அமைந்துள்ளது.

## 5.7 14 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"நெடுவரை விடரகத்து இயம்பும்
கருமான் புல்லிய காடிறந் தோரே"

இவ்வடிகளில் வரை, காடு பற்றிக் கூறப்பட்டுள்ளதால் மலை சார்ந்த பகுதி தன் நிலையிலிருந்து மாறிய பாலை நிலம் என்பதை அறியமுடிகின்றது.

### கருப்பொருள்

"மாமடல் அவிழ்ந்த காந்தளஞ் சாரல்
ஞால்வாய்க் களிறு பாந்தள் பட்டெனத்
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்"

இவ்வடிகளில் காந்தள் மலர், களிறு, பிடி, பாந்தள் ஆகியவை பயின்றுவந்துள்ளன. பாந்தள் என்பது பாம்பைக் குறிக்கும் சொல்லாகும். இவையே இப்பாடலில் பயின்றுவந்துள்ள கருப்பொருட்கள் ஆகும்.

"பழுவும் பாந்தளும் முளப்படப்பிறவும்"[15]

### உரிப்பொருள்

"தொள்கவின் தொலையத் தோள்நலம் சாஅய்
நல்கார் நீத்தனர் ஆயினும் நல்குவர்
நட்டனர் வாழி தோழி................................
................................காடிறந் தோறே"

இவ்வடிகளில் தலைவன் என் நலன் அழியப்பிரிந்து சென்றாலும் 'நல்லவர்' என்று குறிப்பிட்டுள்ளதிலிருந்து தலைவன் பிரிந்து சென்றுள்ளதை அறியமுடிகின்றது.

### வரலாற்றுச் செய்தி

குட்டுவனின் கழுமலம் என்ற ஊரைச் செம்பியன் தீ வைத்த செய்தி இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

## 5.8 18 ஆம் பாடல்

### முதற்பொருள்

"ஒன்றிலங்கு அருவிய குன்றிறந்தோரே"

இவ்வடியில் குன்று என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து இப்பாடலின் நிலம் மலை என்பதை அறியமுடிகின்றது.

### கருப்பொருள்

"கடாஅம் கழீஇய கதன்ங்கு யானைத்

.........................................................................

ஒன்றிலங்கு அருவிய குன்றிறந்தோரே"

இவ்வடிகளில் யானையின் மருப்பிற்கு அருவி ஒப்பிடப்பட்டுள்ளது. இதிலிருந்து யானையையும், அருவியையும் கருப்பொருளாக இப்பாடலில் பயன்படுத்தியிருக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

### உரிப்பொருள்

"பருவரல் நெஞ்சமொடு பல்படர் அகல
வருவர் வாழி தோழி..............................."

இவ்வடிகளில் மலை வழியில் சென்ற தலைவர் வருவர், என்பதிலிருந்து தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்து சென்றுள்ளது புலப்படுகிறது. எனவே பிரிதல் இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறியலாம்.

*வரலாற்றுச் செய்தி*

"............................................மூவன்

முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்"

இவ்வடிகளில் மூவனை வென்ற பொறையன் மூவனின் பல்லைக் கோட்டைக் கதவில் பதித்து வைத்த செய்தி இடம் பெற்றுள்ளது.

### 5.9 24 - *ஆம் பாடல்*

*முதற்பொருள்*

இப்பாடலில் முதற்பொருள் பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை.

*கருப்பொருள்*

"பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு

உடும்பு அடைந்தன்ன நெடும்பொரி விளவின்

ஆட்டொழி பந்தின் கோட்டுமூக்கு இறுபு

கம்பலத்த அன்ன பைம்பயிர்த் தாஅம்

வெள்ளில் வல்சியாகும்............................"

இவ்வடிகளில் உடும்பு விளாமரத்தின் அடிமரத்திற்கு உவமையாகக் கூறப்படுகிறது. விளாமரத்தின் பழம்தான் இவ்வழியில் செல்வார்க்கு உணவாகும் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து உடும்பு, விளாமரம், விளாம்பழம் இப்பாடலின் கருப்பொருளாக வந்துள்ளன என்பதை அறியலாம்.

*உரிப்பொருள்*

"செயல்படு மனத்தர் செய்பொருட்கு

அகல்வர் ஆடவர் அது அதன் பண்பே"

இவ்வடிகளில் வினையின் பொருட்டு ஆடவர் அகல்வர் என்பதிலிருந்து தலைவன் பிரிந்து சென்றுள்ளதை அறியமுடிகின்றது.

### 5.10 26 - *ஆம் பாடல்*

*முதற்பொருள்*

"சுடர்முழுது எறிப்பத் திரங்கிச் செழுங்காய்

முடமுதிர் பலவின் அத்தம் நும்மொடு"

இவ்வடிகளில் வெப்பம் மிகுந்த பலாமரம் நிறைந்த வழியில் என்பதிலிருந்து பாலையின் தன்மை இந்நிலத்தில் காணப்பட்டிருக்கிறது என்பதை அறியலாம்.

**கருப்பொருள்**

"பிண்ட நெல்லின்...............................

........................................................................

முடமுதிர் பலவின்........................"

இவ்வடிகளில் நெல் குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து உணவு அரிசிச்சோறு என்பது புலப்படுகிறது. பலா பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதால் பலாமரம் இந்நிலத்தில் இருந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது. ஆக நெல்லரிசிச்சோறும், பலாமரமும் இப்பாடலின் கருப்பொருள்களாகும்.

**உரிப்பொருள்**

"நோகோ யானே நெகிழ்ந்தன வளையே

....................................................................................

விண்டுப் புரைவும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை ஒழியச்
சுடர்முழுது எறிப்பத் திரங்கிச் செழுங்காய்
முடமுதிர் பலவின் அத்தம் நும்மொரு
கெடுதுணை ஆகிய தவறோ................................"

இவ்வடிகளில், தலைவி அவ்வழியில் தாய்மனையை விட்டு வந்தாள் நீயோ பிரிந்து செல்கிறேன். என்கிறாய் நீ பிரிந்து சென்றாள் அவள் எப்படி வாழ்வாள் என்று தோழி தலைவனிடம் கூறுவதாக அமைந்துள்ளதிலிருந்து, தலைவன் பிரிய முற்படுகிறான் என்பதை அறியமுடிகிறது.

## 5.11 28 ஆம் பாடல்

**முதற்பொருள்**

"வேங்கைதாய ஓங்குமலை அடுக்கத்து"

இவ்வடியில் மலை பற்றிக் கூறப்பட்டுள்ளதால் மலையே இப்பாடலின் நிலம் எனலாம்.

**கருப்பொருள்**

"..........................அருவிப் பொன்னென

வேங்கை......................................................

ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்"

இவ்வடிகளில் வந்துள்ள வேங்கை மலரும் அருவியும், மூங்கிலும், நீராகவும் மரமாகவும் பயன்பட்டுவந்த கருப்பொருள்கள் எனலாம்.

**உரிப்பொருள்**

"என்னைக் கொண்டு தன்கண் ஒற்றியும்

தன்கைக் கொண்டு என் நன்னுதல் நீவியும்

அன்னை போல இனிய கூறியும்

கள்வர் போலக் கொடியன் மாதோ"

இவ்வடிகளில் தன்னைச் சேர்ந்திருக்கும் போது இனிய கூறியவன், பிரியும் போது கள்வன் போலச் சென்று விட்டான் என்று கூறுவதிலிருந்து, தலைவன் பிரிவை நினைத்துத் தலைவி வருந்துவது புலப்படுகிறது

## 5.12 29 ஆம் பாடல்

**முதற்பொருள்**

"நின்ற வேனில் உலந்த காந்தள்

அழல் அவிர் நீளிடை நிழலிடம் பெறாது"

இவ்வடிகளில் இடம் பெற்றுள்ள வெம்மை தொடர்பான சூழல்வழி பாலை நிலம் என்பதை அறியலாம் வேனில் என்றாலே வெப்பம் மிகுதியாய் உடையகாலம் எனலாம். நின்ற வேனில் என்பதிலிருந்து வெப்பம் நிலைபெற்று நின்று எரித்தது என்ற பொருள்படும் நிழலுக்கு இடமே இல்லாமல் இவ்வழிக் காணப்பட்டதை இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது.

"நின்ற வேனில்..............

..................................................

மான்ற மாலை............................"

இவ்வடிகளில் வேனிலாகிய முதுவேனிற் காலத்தைப் பற்றியும் மாலைப் பொழுது பற்றியும் கூறப்பட்டுள்ளதால் இவையே இப்பாடலின் முதற்பொருள் எனலாம்.

**கருப்பொருள்**

............................உலந்த காந்தள்

..........................................................................................

புலிபார்த்து உறையும் புல்லதர்ச் சிறுநெறி"

இவ்வடிகளில் வெப்பத்தினால் காய்ந்த காய்கள் பற்றியும் புலி உணவின்றி இருக்கும் என்று கூறுவதிலிருந்து பாலையின் தன்மையும், காந்தள், புலி இவ்விரண்டும் இப்பாடலின் கருப்பொருள்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

**உரிப்பொருள்**

"புலிபார்த்து உறையும் புல்லதர்ச் சிறுநெறி
யாங்கு வல்லுநன்கொல்.........................."

இவ்வடியில் புலிதங்கும் அவ்வழியில் எப்படி செல்வாளோ என்று தாய் புலம்புவதிலிருந்து, தலைவி தலைவனுடன் தமர் வரை விட்டுப் பிரிந்து சென்று விட்டாள் என்பதை அறியமுடிகிறது.

## 5.13 33 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"படுசுடர் அடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்

..........................................................................................

கல்லுடைப் பகுவில் கலுழி தந்து
நிறைபெயல் அறியா............................"

இவ்வடிகளில் கதிரவன் மலையில் மறைந்தான் என்றும் கற்களை உடைய அப்பகுதியில் நிறைபெயல் அறியா என்பது மழை பெய்யாது என்றும் கூறப்பட்டுள்ளதிலிருந்த்து பாலைத் தன்மைக் கொண்ட நிலம் என்பதை அறியமுடிகின்றது.

"......................................பரந்த மாலைப்

.....................................................................................

நிறைபெயல் அறியா குறைக்குஊண் அல்லில்"

இவ்வடிகளில் மாலைப் பொழுதும், 'அல்' இரவுப் பொழுதும் பயின்றுவந்துள்ளதால் இவையே இப்பாடலின் பொழுது எனலாம்.

**கருப்பொருள்**

"துவர்செய் ஆடைச் செந்தொடை மறவர்
அதர்பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை"

இவ்வடிகளில் மறைந்திருந்து தாக்கும் கள்வர் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து களவு செய்தல் இவர்கள் தொழில் என்பதை அறியலாம்.

**உரிப்பொருள்**

"............................................அஞ்சுவரு நெறியிடை
இறப்ப எண்ணுவர் அவரெனின் மறுத்தல்"

இவ்வடிகளில் கள்வர்கள் நிறைந்த அவ்வழியில் தலைவர் பிரிந்து செல்ல எண்ணுகிறார் என்பதிலிருந்து பிரிவு முற்படல் இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

**5.14 37 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

"பிணங்கு அரில் வாடிய பழவிறல் நனந்தலை
உணங்கு ஊண் ஆயத்து ஓர் ஆன் தெண்மணி
பைய இசைக்கும் அத்தம் வையெயிற்று"

இவ்வடிகளில் வந்துள்ள 'ஆயத்து ஓர் ஆன்' என்பதில் ஆயம் நிரை கட்டப்படும் இடத்தைக் குறிக்கும், இவ்விடத்தில் உள்ள ஆன் உணவின்றி

வருந்துவதாகவும், இந்நிலப்பகுதி வாடி இருக்கிறது என்றும் கூறுவதிலிருந்து இப்பாடலின் பாலைத் தன்மையை அறியமுடிகிறது.

"கார் செய் மாலை வரூஉம் போழ்தே"

இவ்வடிகளில் கார்காலமும், மாலைப்பொழுதும் முதற்பொருளைக் குறிக்கும் பொழுதாகப் பயின்றுவந்துள்ளன. இவை முல்லை நிலத்திற்குரிய பொழுது எனினும் பாலை நிலம் முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலமாதலால், இப்பொழுது நிலையைப் பாலைக்கும் உரியதாகக் கருதவேண்டி உள்ளது.

**கருப்பொருள்**

"......................ஆயத்து ஓர் ஆன் தெண்மணி
கலையொழி பிணையின் கலங்கிமாறி
..............................................................நாகத்து"

இவ்வடிகளில் வந்துள்ள ஆண், கலை, நாகம் என்பவை விலங்கின் பெயரைக் குறிக்கும் கருப்பொருட்களாகும். கலை - ஆண் மானைக் குறிக்கும். என்பதை

"சேவும் சேவலும் இரலையும் கலையும்
...........................ஆண்பாற் பெயரென மொழிப"[16]

இந்நூற்பாவின் வழி அறியலாம்.

"......................................................குவளை
நீர்சூழ் மாமலரன்ன ..........................."

இவ்வடிகளில் குவளை மலர் பற்றிக் கூறப்பட்டுள்ளதால் குவளை இப்பாடலின் கருப்பொருள் என்பதை அறியலாம்.

**உரிப்பொருள்**

"..................................அத்தம் வையெயிற்று
இவளொடும் செலினே நன்றே குவளை
நீர் சூழ் மாமலரன்ன கண் அழக்"

தோழி தலைவனிடம், தலைவியை அழைத்துச் சென்றால்பாலைவழி இவளை வருத்தும். விட்டுச் சென்றால் தனிமை வருத்தும் என்று கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது, இவற்றிலிருந்து தலைவன் பிரிதலுக்கு முற்படுதலை அறியமுடிகின்றது.

## 5.15 41 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"சுரன்முதல் வருந்திய வருத்தம் பையப்"

என்ற அடியில் சுரனில் வருந்திய வருத்தம் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து பாலைத்தன்மை இப்பாடலில் இடம் பெற்றுள்ளது எனலாம்.

"எல்லி வந்த நல்லிசை விருந்திற்கு"

இவ்வடியில் வந்துள்ள 'எல்லி' இரவைக் குறிக்கும் ஆகவே இரவு இப்பாடலில் பொழுது என்பதை அறியலாம்.

### கருப்பொருள்

"பாரம் மலிசிறு கூலவின் தணியும்"

இவ்வடியில் வந்துள்ள 'பாரம்' பருத்திச் செடியையும், கூவல் கிணற்றையும் புலப்படுத்தும் சொற்களாகும்.

"பாரம் பீரம் பைங்குருக்கத்தி"[17]

என்ற பாடலின் உரையின் பாரம் - பருத்திப்பூ என்று கூறப்பட்டுள்ளது.

".....................................................கூவல்
குராலான் படுதுயர் இரவிற்கண்ட"[18]
கூவல் அன்ன விடரகம் புகுமின்"[19]

என்ற அடிகளில் வந்துள்ள கூவல் கிணற்றைக் குறிக்கிறது,. என்பதும் இங்கு ஒப்பிட்டு நினைக்கத்தக்கது.

" ................... அரிவை நெய்துழந்து அட்ட

விளர்ஊன்............................................"

என்ற அடிகளில் நெய்யிடப்பட்ட ஊன் உணவைச் சமைத்திருக்கிறாள் என்பதிலிருந்து நெய்யிடப்பட்ட ஊன் உணவு இப்பாடலில் இடம் பெற்றுள்ளது எனலாம்.

ஆக, யானை, கிணற்று நீர், பாதிரிச்செடி, பூ, நெய் ஊன் உணவு இவையே இப்பாடலில் இடம் பெற்றுள்ள கருப்பொருட்களாகும்.

**உரிப்பொருள்**

"சுரன்முதல் வருந்திய வருத்தம் பையப்

பாரம் மலிசிறு கூவலின் தணியும்

நெடுஞ்சேண் சென்று வருந்துவர்"

இவ்வடிகளில் சுரன் பற்றியும் அதன் தன்மை பற்றியும் கூறப்பட்டுள்ளன. 'நெடுஞ்சேன்' என்பதிலிருந்து தலைவன் பிரியப்போகிறான் என்பதை அறியலாம். இதனால் வருந்திய தலைவியைத் தேற்றுவதாக இப்பாடல் அமைந்துள்ளதால் இப்பாடல் பிரிவை உரிப்பொருளாகக் கொண்டுள்ளது எனலாம்.

## 5.16 43 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"துகில்விரித் தன்ன வெயிலவிர் உருப்பின்

என்றூர் நீடிய குன்றத்துக் கவாஅன்

ஒய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி

ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு

அருஞ்சுரம் செல்வோர்க்கு வல்சியாகும்

வெம்மை ஆரிடை.............................."

இவ்வடிகளில் பாலை நிலத்தின் கடுமை கூறப்பட்டுள்ளது இந்நிலம் வெம்மை உடையதாகும். குன்றத்தின் பக்கம் உள்ள செந்நாய் தின்று போட்ட மரை உணவை இவ்அருஞ்சுரத்திற்கு வரும் மக்கள் தின்கின்றனர்

என்பதிலிருந்து இந்நிலத்தில் மக்கள் உணவு உட்கொள்ள முடியாத கடுமையான சூழலுக்குரியதாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. இப்பாடலில் பயின்றுவந்துள்ள மரை என்பது மானைக் குறிக்கும் என்பதற்குச் சான்றாக,

"எருமையும் மரையும் வரையார் ஆண்டே"[20]
"மரையினம் ஆரு முன்றில்
புல்வேய குரம்பை நல்லோ ளூரே"[21]

இப்பாடலடிகள் அமைந்துள்ளன.

**கருப்பொருள்**

"ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை......................
.....................வல்சியாகும்
பைங்கண் யானை.............................."

இவ்வடிகளில் வந்துள்ள செந்நாய், யானை இவையே இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"வெம்மை ஆரிடை இறத்தல் நுமக்கே
மெய்ம்மலி யுவகை ஆகின்று இவட்கே"

வெம்மையான அரிய வழியை உடைய பாலைநிலத்திற்குச் செல்ல நினைக்கின்றாய் அந்நிலத்திற்குச் செல்வோர் செந்நாய் உண்ட உணவின் மிச்சத்தைஉண்பர் என்று அவ்அருஞ்சுரம் பற்றித் தோழி கூறிச் செலவழுங்குவிப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. எனவே பிரிதல் தொடர்பான கருத்தே இப்பாடலின் உரிப்பொருள் எனலாம்.

**5.17 46 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

"வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவத்து
..............................அருஞ்சுரம் இறந்து"

இவ்வடிகளில் வெம்மையான காற்றுவீசக் கூடிய அரிய சுரம் என்று கூறப்பட்டுள்ளதிலிருந்து பாலை நிலம் என்பதை அறியமுடிகிறது.

**கருப்பொருள்**

"..............................கொன்றையந் தீங்கனி

...........................................................................................

..............................வேய்பயில் அழுவத்து"

இவ்வடிகளில் கொன்றைமரத்தின் கனியும், மூங்கில் மரமும் பயின்றுவந்துள்ளன இவையே இப்பாடலின் கருப்பொருள்களாகும்.

**உரிப்பொருள்**

"மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யாம் எனவே"

என்ற அடியில் பிரிய நினைக்கும் தலைவனுக்குத் தோழி கூறுவதாக இச்செய்யுள் அமைந்துள்ளது. இவற்றிலிருந்து பிரிதல் இப்பாடலின் உரிப்பொருளுக்குரியது எனலாம்.

## 5.18 48 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்

...........................................................................................

எமரிடை உறுதர ஒளித்த காடே"

என்ற அடிகளின் புறவு, காடு என்பவை பலசொல் ஒரு பொருள் நிலையில் காட்டைக் குறிக்கும் வகையில் வந்துள்ளன. ஆக காடே இப்பாடலின் நிலம் எனலாம்

**கருப்பொருள்**

"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ"

இவ்வடியில் கோங்கம் மரத்தில் உள்ள குடைப்பூ கூறப்பட்டுள்ளது. எனவே இப்பூவே இப்பாடலின் கருப்பொருள் என்பதை அறியமுடிகின்றது.

**உரிப்பொருள்**

"அன்றை அனைய ஆகி இன்றும்எம்
கண்ணுள் போலச் சுழலும் மாதோ
.............................................................................
அமரிடை உறுதர நீக்கி நீர்
எமரிடை உறுதர ஒளித்த காடே"

இவ்வடிகள் முன்பு நடந்த நிகழ்வை எடுத்துச் சொல்லிப் பிரிந்து செல்லக் கூடாது என்று தலைவற்குத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளன. எனவே இப்பாடல் பிரிவு தொடர்பான கருத்தியலுக்கு உட்பட்டது என்பதை அறியலாம்.

**5.19 52 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை

**கருப்பொருள்**

"மாக்கொடி அதிரல் பூவொடு பாதிரித்"

இவ்வடியில் வந்துள்ள அதிரல் காட்டுமல்லிகைப் பூவைக் குறிக்கும். பாதிரிப் பூவும் இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

"அதிரல் - காட்டு மல்லிகை"[22]
"அதிரல் - மோசி மல்லிகை"[23]

என்று அதிரல் பூவிற்கு இருவேறுவகையான பெயர்கள் உரைகளில் கூறப்பட்டுள்ளன. ஆக, இப்பாடலின் கருப்பொருள் காட்டுமல்லிகையும், பாதிரிப்பூவும் ஆகும்.

**உரிப்பொருள்**

"............................................நீங்கள் செல்லேம்"

என்ற அடியில் நீங்கி செல்லேம் என்பது தலைவியைப் பிரிந்து செல்லமாட்டேன் என்பதாகும். பிரிய மாட்டேன் என்று நெஞ்சிடம்

கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். எனவே பொருள் குறித்துப் பிரிதல் இன்றியமையாதது என்பதை அறிய முடிகிறது. ஆக இப்பாடலின் உரிப்பொருள்பிரிவு என்பதை அறியலாம்.

### 5.20 56 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் இடம் பெறவில்லை.

**கருப்பொருள்**

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்தேரு நாற்றம் வளிகலந்து ஈயக்"

இவ்வடிகளில் குராமரமும், அவற்றின் பூவும், வண்டும் பயின்றுவந்துள்ளன. இவையே இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"சென்ற நெஞ்சம் செய்வினைக்கு உசாவாய்
ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ
அருளான் ஆதலின் அழிந்து இவண் வந்து
தொல்நலன் இழந்தஎன் பொன்னிறம நோக்கி"

இவ்வடிகளில் வந்துள்ள "சென்ற நெஞ்சம்" என்ற சொற் பயன்பாட்டின்வழி தலைவன் பிரிந்திருக்கிறான் என்பது புலப்படுகிறது. வினையின் பொருட்டுச் சென்ற தலைவனைப் பார்க்கச் சென்ற நெஞ்சம் என்பதிலிருந்தும், தலைவி உடல் நலன் இழந்து காணப்படுகிறாள் என்ற குறிப்பிலிருந்தும் பிரிதலே இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறியமுடிகின்றது.

### 5.21 62 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"என்றூழ் நீடிய வேய்பிறங்கு அழுவத்துக்
குன்றூர் மதியம்..........................................................
......................................................................................
................................வெவ்வளி எடுப்ப நிழல்தப

உலவை யாகிய மரத்து
கல்பிறங்கு மாமலை உம்பரஃது எனவே"

இவ்வடிகளில் மலையைப் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது வெம்மையான காற்று, இலைகள் இல்லாத மரம் ஆகியவையும் கூறப்பட்டுள்ளன. எனவே மலை பாலைத் தன்மையைப் பெற்றுக் காணப்படுகிறது என்பதை அறியமுடிகிறது.

### கருப்பொருள்

"கந்துபிணி யானை............................
............................வேய்பிறங்கு அழுவத்து"

இவ்வடிகளில் யானை வேய் (மூங்கில்) பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளதால், இவையே இப்பாடலின் கருப்பொருள்கள் என்பதை அறியமுடிகின்றது.

### உரிப்பொருள்

"குன்றூர் மதியம் நோக்கி நின்று நினைத்து
உள்ளினேன் அல்லனோ யானே
திலகம்தைஇய தேங்கமழ் திருநுதல்
.............................................மதிநாள் திங்கள்"

இவ்வடிகளில் முன்பு ஒருநாள் தலைவியைப் பிரிந்து செல்லும் போது குன்றில் காணப்பட்ட நிலவைப் பார்த்ததும் தலைவியின் நினைவு வந்து துன்பப்பட்டேன் என்ற கருத்து இடம் பெற்றுள்ளது. இது பிரிதல் பற்றிக் கூறுவதால் பிரிதல் உரிப்பொருள் இப்பாடலுக்குரியது என்பதை உணரலாம்.

## 5.22 66 - ஆம் பாடல்

### முதற்பொருள்

"புன்புறா உயவும் வைந்துகள் இயவின்
நயந்த காதலர் புணர்ந்தனள்..........................."

இவ்வடிகளில் புலாவின் நிலையைக் கூறி, அத்தகைய வழியில் தன் மகளும் சென்றுள்ளாளே என்று தாய் கூறுவதிலிருந்து அந்நிலத்தின் கடுமையினால் பாலை நிலம் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கருப்பொருள்**

"புன்புறா உயவும்........................"

என்ற அடியில், வந்துள்ள புறா இப்பாடலின் பறவையைக் குறிக்கும் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"...............................................இயலின்
நயந்த காதலற் புணர்ந்தனள்"

தலைவனுடன் சென்ற தலைவியை நினைத்து நற்றாய் புலம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளதிலிருந்து தமர்வரைப்பிரியும் பிரிவு நிகழ்ந்துள்ளது என்பதை அறியலாம், ஆக இப்பாடலின் உரிப்பொருள் பிரிதல் எனலாம்.

## 5.23 71 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

இப்பாடலில் முதற்பொருள் பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை.

**கருப்பொருள்**

"வளையணி முன்கைநின் இகுளைக்கு உணர்த்து"

இவ்வடியில் வந்துள்ள இகுளை என்ற சொல் தலைமகள் பெயரைக் குறிக்கும் சொல் ஆகும்

"காரன்று இகுளை தீர்கநின் படரே"[24]

என்ற அடியில் வந்துள்ள இகுளை என்ற சொல்லும் தலைமகள் பெயரைக் குறிப்பதாக அமைந்துள்ளது

"வண்ணப் புறவின் செங்கால் சேவன்"

என்ற அடி பெண்புறா, ஆண்புறாவின் அன்புநிலை பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது. ஆக, இகுளை, பெண்புறா, ஆண்புறா இப் பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"கண்ணும் நுதலும் நீவி முன்நின்று
பிரிதல் வல்லிரோ?..................................."

இவ்வடிகளில் பிரிதலுக்கு முற்படும் தலைவனிடம் தோழி தலைவியின் நிலையை எடுத்துக் கூறுவதாகச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. எனவே இப்பாடல் பிரிதல் உரிப்பொருள் உடையது என்பதை அறியமுடிகின்றது.

## 5.24 73 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"செந்நெல் அஞ்செறுவின் அன்னம் துஞ்சும்
பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்
நுதல் கவின் அழிக்கும் பசலையும்"

என்ற அடிகளில் அன்னம் துஞ்சம் காடு போன்று நுதல் கவின் என்று உவமைக்காகக் காடு பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தக் காடு முல்லை நிலத்திற்குரியதாகும், மேலும் செந்நெல் என்று வந்துள்ளது இது மருதநிலத்திற்குரிய வயலில் விளைய கூடியதாகும். வேனிற்காலம், வேய் போன்றவையும் இடம்பெற்றுள்ளன. எனவே வயலும் காடும் திரிந்த பாலைநிலமும் உண்டு என்பதை அறியமுடிகிறது.

"வேனில் முருக்கின்................................
...................................................................................
.......................................புன்கண் மாலை"

என்று அடிகளில் வந்துள்ள வேனிற்காலமும் மாலையும் இப்பாடலில் குறிப்பிடப்பட்ட பொழுதாகிய முதற்பொருள் ஆகும்.

**கருப்பொருள்**

"முருக்கின் வினைதுணர் அன்ன"

என்ற அடியில் முருக்கின் பூ கூறப்பட்டுள்ளது. இது இப்பாடலின் மலர் தொடர்பான கருப்பொருள் ஆகும்.

"செம்பூ முருக்கின் நன்னார் களைந்து"[25]

என்ற குறுந்தொகை அடியும் இங்கு இணைத்து எண்ணத்தக்கது.

"..............................................அன்னம் துஞ்சும்"

இவ்வடியின் அன்னம் பயின்றுவந்துள்ளது.

"செந்நெல் அஞ்செறுவின்................................."

என்ற அடியில் நெல் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக அன்னம், செம்முருக்கின் பூ, நெல் அரிசி இப்பாடலின் கருப்பொருளாகும்.

**உரிப்பொருள்**

"..........................................புன்கண் மாலைத்
தம் மொடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச்
செல்ப என்ப தாமே........................................"

தலைவனுடன் இருக்கும் போதே பிரிந்து விடுவானோ என்று தலைவி வருந்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இது பிரிவுக்கு முந்தைய நிலை எனலாம்.

**5.25 76 - ஆம் பாடல்**

**முதற்பொருள்**

"வருமழை கரந்த வால்நிற விசும்பின்
நுண்துளி மாறில உலவை அம்காட்டு
....................................................................................
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி உயற்கே"

இவ்வடிகளில் மழையும் வரவில்லை, காற்றும் சுழன்று வீசுகிறது உன் மெல்லிய அடிகளும் கல்லில் பட்டுச் சிவந்தன என்று தலைவன் கூறுவதிலிருந்து, இவை பாலை நில வழியை உணர்த்துகின்றன. என்பதை அறியலாம்.

**கருப்பொருள்**

"ஆல நீழல் அசைவு நீக்கி"

என்ற அடியில் வந்துள்ள ஆலநீழல் என்பது, ஆலமரத்தின் நிழல் என்று பொருள்படும் ஆலமரம் இப்பாடலில் பயின்றுவந்துள்ள மரமாகும்.

"........................................................புன்னை"

இவ்வடிகளில் புன்னை மலர் உதிர்ந்த தின் ஊர் என்று கூறுவதிலிருந்த புன்னை மலர் இப்பாடலில் பயின்று வந்துள்ளதை அறியமுடிகிறது.
ஆக ஆலமரமும், புன்னை மரமும், பூவும் இப்பாடலின் கருப்பொருள்கள் என்பதை அறியலாம்.

**உரிப்பொருள்**

"ஆலநீழல் அசைவு நீக்கி

..................................................................

வருந்தாது ஏகுமதி.................................

..................................................................

கல்லுறச் சிவந்தநின் மெல்லடி உயற்கே"

என்ற அடிகளில் கற்கள் பட்டு உன் கால்கள் சிவந்தன ஆல மரநிழலில் அமர்ந்து வருந்தாது வருவாயாக என்று கூறுவதிலிருந்து தமர்வரை விட்டுப் பிரிந்து தலைவனும் தலைவியும் வந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

## 5.26 79 - ஆம் பாடல்

**முதற்பொருள்**

"................................அறைமிசைத் தாஅம்

ஏர்தரல் உற்ற இயக்கு அருங்கவலைப்"

இவ்வடிகளில் பயின்றுவந்துள்ள ‘அறை’ பாறையைக் குறிப்பதால் மலைப்பகுதி என்பதும், அருங்கவலை என்று வந்துள்ளதால்அரிய வழி என்பதும் புலப்படுகின்றன. இவை பாலை நிலத்தின் தன்மையை உணர்த்துவனவாக உள்ளன.

**கருப்பொருள்**

"சிறைநாள் ஈங்கை உறைநனி திரள்வீ"

என்ற அடியில் வந்துள்ள ஈங்கை மலர் கருப்பொருள் ஆகும்.

***உரிப்பொருள்***

"பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ

.......................................................................

யாதனின் தவிர்க் குவம் காதலர் செலவே"

இவ்வடிகள் தலைவனின் பிரிவைத் தடுக்க வேண்டும் என்று தலைவி கூறுவதாக அமைந்துள்ளன. இவற்றிலிருந்து அறியும் செய்தி தலைவன் பிரிந்து செல்லப்போகிறான் என்பதாகும். எனவே பிரிதல் இப்பாடலின் உரிப்பொருள் என்பதை அறியலாம்.

## 5.27 84 - ஆம் பாடல்

***முதற்பொருள்***

"உவர்எழு களரி ஓமையங் காட்டு
வெயில் வீற்றிருந்த வெம்பல் அருஞ்சுரம்"

இவ்வடிகளில் இடம் பெற்றுள்ள ஓமைமரம், வெயில், வெம்பல் அருஞ்சுரம் ஆகியவை பாலை நிலத்துடன் தொடர்புடைய சொற்கள் ஆகும். வெம்பல் அருஞ்சுரம் என்பது வெப்பம் மிகுந்த சுரம் என்ற பொருள் உடையது. ஆக வெப்பம் மிகுந்த பாலை இப்பாடலின் நிலமாகும்.

"வெயில் வீற்றிருந்த வெம்பல் அருஞ்சுரம்"

என்ற அடிகளில் வெயில் என்ற சொல் வந்துள்ளது. முதுவேனிற் காலத்தில்தான் பெரும்பான்மை வெப்பம் மிகுந்து காணப்படுவதால் முதுவேனிற் இதன் பெரும்பொழுது எனலாம்.

### கருப்பொருள்

"..........................மான் நசை உறூஉம்

..................................................................................

...........................................ஓமையங்காட்டு"

இவ்வடிகளில் பயின்றுவந்துள்ள ஓமைமரமும், மானும் இப்பாடலின் கருப்பொருட்களாகும்.

### உரிப்பொருள்

"உவர் எழு களரி ஓமையங் காட்டு
வெயில் வீற்றிருந்த வெம்பல் அருஞ்சுரம்
ஏகுவர் என்ப தாமே தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்றா
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே"

இவ்வடிகளில் "அருஞ்சுரவழியில் தலைவன் பிரிந்து செல்லும் போது நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன் என்று தலைவி குறிப்பிடுவதன் வழி இப்பாடல் பிரிதல் உரிப்பொருளுக்கு உரியதாகின்றது எனலாம்.

## 5.28 86 - ஆம் பாடல்

### முதற்பொருள்

நிலம் பற்றிய செய்தி இப்பாடலில் இடம் பெறவில்லை.

"கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தகக்"

என்ற அடியில் வந்துள்ள கடும்பனி அற்சிரம் என்பது முன்பனிக்காலத்தைக் குறிக்கின்றது. இதே போன்ற நிலையை,

"........................................மாலைப்
பின்பனிக் கடைநாள் தண்பனி யச்சிரம்"[26]

என்ற பாடல் அடியில் காணலாம்.

"முற்றா வேனில் முனி வந் தோரே"

என்ற அடியில் வந்துள்ள 'முற்றாவேனில்' என்பது இளவேனில் காலத்தைக் குறிக்கின்றது.

ஆக இப்பாடலில் முன்பனிக்காலமும், இளவேனிற் காலமும் பொழுதாகப் பயின்றுவந்துள்ள முதற்பொருள்கள் எனலாம்

**கருப்பொருள்**

"..................................பகன்றை மலரும்

.........................................................................

கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை

நற்றளிர் நயவர நுடங்கும்"

இவ்வடிகளில் பயின்றுவந்துள்ள பகன்றை, கோங்கம் ஈங்கை (இண்டம்பூ) என்ற மூன்று மலர்களும் குறிஞ்சிப்பாட்டிலும் இடம் பெற்றுள்ளன. அவ்விடங்கள் வருமாறு

"குறுநிலை மருமம் விரியூங்கோங்கம்"[27]

"மீங்கை யிலவந் தூங்கிணர்க் கொன்றை"[28]

"பகன்றை பலாரம் பல்பூம் பிண்டி"[29]

**உரிப்பொருள்**

"அறவர் வாழி தோழி.....................................

....................................................................

கைவல் வினைவன் தையுபு சொரிந்த

....................................................................

முற்றா வேனில் முனிவந் தோரே"

வினையின் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வந்ததை நினைத்துத் தலைவி மகிழ்வதாக இப்பாடல் அமைந்துள்ளது. எனவே பிரிவுடன் ஒரு வகையில் தொடர்புடையதாகவே இப்பாடலின் உரிப்பொருளும் அமைந்துள்ளது எனலாம்.

5.29 92 - ஆம் பாடல்

முதற்பொருள்

"வறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்

..........................................................................

..........................................................................சுரன் இறந்தோரே"

இவ்வடிகளில் வந்துள்ள 'வறன்பொருந்து குன்றம்' என்ற சொல்லாட்சிகள் வறட்சிப் பொருந்திய குன்றம் என்பதைக் குறிக்கின்றன. சுரன் என்பது வெப்பமான நிலப்பகுதியைக் குறிப்பதால் இப்பாடல் பாலை நிலத்தைக் குறிக்கிறது எனலாம்.

"வேனில் ஓதிப் பாடுநடை வழலை
வரமரல் நுகும்பின் வாடி............................
..........................................................................
................................................கேணிப்
பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பக்தர்
புன்தலை மடப்பிடி கன்றொடு
கொல்களிற்று ஒருத்தல்......................."

இவ்வடிகளில் வேனில் என்ற சொல் முதுவேனில் பொழுதைக்குறிக்கும். வறட்சியினால் நீர் இல்லாததும் மரல் கொடிகள் வாடி இருப்பதும், களிறு நீர் இன்றி இருப்பதும் முதுவேனிற் காலத்தால் ஏற்படுவனவாகும்.

"காய்சினம் திருகிய கடுதிறன் வேனில்"[30]
"கல்காயும் கரு வேனிலொடு"[31]

என்று பத்துப்பாட்டு இலக்கியங்களிலும் முதுவேனிற் காலம் கடுமையானதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு நினைக்கத்தக்கது.

கருப்பொருள்

"வேனில் ஓதிப் பாடுநடை வழலை
வரிமரல் நுகுப்பின் வாடி அவண"

என்ற அடிகளில் வழலை, மரல் பற்றிக் கூறப்பட்டுள்ளன. வழலை பாம்பையும், மரல் கொடியையும் குறிக்கக்கூடிய கருப்பொருள்களாகும்.

“வேட்டச் சீறூர் அகன் கண் கேணிப்
பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்தலை மடப்பிடி கன்றொடு ஆர
.................................................
கொல்களிற்று ஒருத்தல்........................”

இவ்வடிகளில் வேட்டத் தொழிலும், கேணிநீரும், நிரையும், பிடியும், களிறும் கருப்பொருள்களாகப் பயின்றுவந்துள்ளன.

### உரிப்பொருள்

“உள்ளார் கொல்லோ தோழி......................”

என்ற அடியில் ‘தலைவன் தன்னை நினைக்கவில்லை தோழி’ என்று தலைவி கூறுவதிலிருந்து தலைவன் பிரிந்திருக்கிறான் என்பதை அறிய முடிகிறது.

### தொகுப்புரை

இவ்வியல் வழி அறியலாகும் கருத்துக்கள் வருமாறு

- தொல்காப்பியர் பாலைத்திணைக்கு நிலம் கூறவில்லை இருப்பினும் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் முல்லையும் குறிஞ்சியும் திரியும் போது பாலைத்தன்மை காணப்படுகிறது என்று கூறியுள்ளார். இப்பாலைத் தன்மையை நற்றிணைப் பாடல்களிலும் காண முடிகிறது. இளவேனிற் முதுவேனிற், பின்பனி போன்ற பொழுதுகள் பாடல்களில் காணப்படுகின்றன.
- இத்திணையில் புலி, யானை, மான், பாந்தள்உடும்பு, செந்நாய், நிரை ஆகிய விலங்குகள் இடம் பெற்றுள்ளன.

- ஈத்த மரம், மரல்கொடி, வேப்பமரம், நெல்லிமரம், சந்தனமரம், விளாமரம், பலாமரம், மூங்கில் பருத்தி, கொன்றை, கோங்கம், குராமரம்,ஆலமரம், புன்னை, ஈங்கை, ஓமை ஆகிய மரங்கள் பாலைத்திணையில் இடம் பெற்றுள்ளன.
- அருவி, கான்யாறு, கேணி ஆகியவை பாடல்களில் இடம் பெற்றுள்ளன. தலைமகளை இகுளை என்று கூறுவது இத்திணையின் 11ஆம் பாடலில் இடம் பெற்றுள்ளது.
- இத்திணையின் உரிப்பொருள் பிரிதல் என்பதற்கு ஏற்பத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிதலும், தலைவியை உடன்போக்கில் அழைத்துச் சென்று தமர்வரைப் பிரிதலும் பாடல்களில் உரிப்பொருளாக இடம் பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம் அகத்திணையியல் 5.
2. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், அகத்திணையியல், பக்.9
3. தொல்காப்பியம், அகத்திணையியல் 2.
4. தொல்காப்பியம், புறத்திணையியல் 73.
5. தொல்காப்பியம், அகத்திணையியல், 11.
6. சிலப்பதிகாரம் காடுகாண் காதை, 64.
7. சிறுபாணாற்றுப்படை,பக்.10
8. மதுரைக் காஞ்சி பா.313.
9. தொல்காப்பியம், அகத்திணையியல்,12.
10. மேலது,13.
11. மேலது,13
12. நற்றிணை.3
13. தொல்காப்பியம், அகத்திணையியல்,47
14. மேலது, 42-3.
15. குறிஞ்சிப்பாட்டு.209.
16. தொல்காப்பியம், மரபியல்,546.
17. குறிஞ்சிப்பாட்டு, 92.
18. குறுந்தொகை,224.
19. மலைபடுகடாம்.366.
20. தொல்காப்பியம், மரபியல்,60.
21. குறுந்தொகை,235.
22. சிலப்பதிகாரம், புறஞ்சேரி இறுத்த காதை, 156
23. சிலப்பதிகாரம், புறஞ்சேரி இறுத்த காதை, 156
24. குறுந்தொகை, 251

25. மேலது, 156.

26. மேலது, 338

27. குறிஞ்சிப்பாட்டு,73.

28. மேலது,86.

29. மேலது,88.

30. பெரும்பாணாற்றுப்படை, 3,

31. மதுரைக்காஞ்சி,106.

## இயல் - ஆறு

# முதல் கரு, உரிப்பொருள்கள் : ஐந்திணைகளின் ஒப்பீடு

### 6.0 முன்னுரை

இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மூன்றும் பாடல்களில் எவ்வாறு பயின்றுவந்துள்ளன. ஒரு திணைக்குரிய பொருள் பிறதிணைகளில் பயின்றுவந்துள்ளதா? பயின்றுவந்திருந்தால் எவ்வாறு அத்திணைகளில் இடம்பெற்றுள்ளது என்பவற்றை அறிவதாக இவ்வியல் அமைகின்றது.

### 6.1 முதற்பொருள்

**நிலம்**

### 6.1.1. குறிஞ்சித் திணையில் நிலம் பயின்றுவந்துள்ள முறை

இத்திணைக்குரிய நிலமான “மலை” இடம்பெற்றுள்ள பாடல்கள், நிலத்தின் செழிப்பு, மலையின் வடிவம், பறவைகள், மரம், செடி, கொடிகள் பற்றியும் இந்நிலத் தலைவன் தலைவி பற்றியும் கூறுவதாக அமைந்துள்ளன. உயர்ந்த மலை, வானுயர்ந்த மலை, மாமலை, ஓங்குமலை என்று மலையின் வடிவத்தை வர்ணிப்பதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

ஆக இதுவரை கூறப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற குறிஞ்சித்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள நிலம் தொடர்பான விபரங்களைக் கீழ்வருமாறு குறிக்கலாம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 5 | 6 | 8 | 13 | 17 | 22 | 23 |
| 25 | 32 | 34 | 36 | 39 | 44 | 47 | 51 |
| 53 | 55 | 57 | 61 | 64 | 65 | 68 | 75 |
| 77 | 82 | 83 | 85 | 88 | 83 | 95 | 98 |

இந்த 32 பாடல்களில் 54 பாடல்களில் மட்டும் நிலம் பற்றிய செய்தி இடம்பெறவில்லை. அப்பாடல்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 39 | 82 | 83 |

**பிறதிணைக்குரிய நிலம் இடம்பெற்ற பாடல்கள்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6 | 8 | 17 | 23 | 75 | 88 |

**குறிஞ்சித்திணையில் பயின்றுவந்துள்ள நிலங்கள்**

| முல்லை | மருதம் | நெய்தல் |
|---|---|---|
| 6 ஆம் பாடல் | 8 ஆம் பாடல் | 17ஆம் பாடல் |
| 75 ஆம் பாடல் | | 23ஆம் பாடல்<br>88ஆம் பாடல் |
| காடு | வயல் | கடல் |

இத்திணையில் பயின்றுவந்துள்ள முல்லை மருதம் நெய்தல் திணைக்ககுரிய நிலங்கள் உவமைக்காக்க் கூறப்பட்டுள்ளன.

இப்பாடல்கள் தவிர அனைத்துப் பாடல்களிலும் குறிஞ்சித்தணைக்குரிய நிலமான மலை இடம் பெற்றுள்ளது.

### 6.1.1.1 உவமைக்காகக் கூறப்பட்ட பிறதிணை நிலங்கள்

ஆறாம் பாடலில் முல்லைத் திணைக்குரிய காடு பயின்றுவந்துள்ளது. காடு உவமையாக இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. எட்டாம் பாடலில் மருதத்திற்குரிய நிலமான வயல் இடம்பெற்றுள்ளது. இவை பயின்றுவந்துள்ள முறையை எண்ணிப்பார்க்கும் போது உவமைக்காகக் கூறப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகின்றது.

17 ஆம் பாடலில் குறிஞ்சித்திணைக்குரிய நிலம் கூறப்பட்டு, அதற்கு அடுத்த அடியில் நெய்தல் திணைக்குரிய நிலமான கடல் கூறப்பட்டுள்ளது. எனவே நெய்தல் நிலம் இப்பாடலில் மயங்கி வந்துள்ளது என்று கருத இடம் இல்லை.

23 ஆம் பாடலில் நெய்தல் நிலமான கடல் சார்பகுதி மறைமுகமாக இப்பாடலில் பயின்றுவந்துள்ளது. "முத்துப்படு பரப்பின் கொற்கை முன்னுரை" என்ற அடியின் பொருள் கடலைக்குறிப்பதாக அமைந்துள்ளது.

75 ஆம் பாடலில் காட்டில் வேட்டையாடும் கானவர் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது. இச்சொல் முல்லைத் திணையில் வாழக்கூடிய காட்டுமக்களைக் குறிக்கின்றது. கானவர் அம்பில் படிந்திருந்த குருதி போன்று "தலைவியின் கண்" என்று தலைவியின் கண்ணை உவமைப்படுத்த இத்திணையில் காடு கூறப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. 88 ஆம் பாடலில் நெய்தல் நிலமான கடல்பகுதி பயின்றுவந்துள்ளது.

### 6.1.2 முல்லைத் திணையில் நிலம் பயின்று வந்துள்ள முறை

இத்திணைக்குரிய நிலமான காடு, புறவு என்றும் கூறப்பட்டுள்ளது. பாடல்களில் இத்திணை நிலத்தின் தன்மையுடன், பிறதிணைக்குரிய நிலமும் பயின்று வந்துள்ளது விபரம் வருமாறு.

முல்லைத்திணையின் 69 ஆம் பாடலில் குறிஞ்சி நிலமான மலை பயின்று வந்துள்ளது. 89 ஆம் பாடலில் வந்துள்ள முகடு குறிஞ்சித்திணை நிலமான மலையைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

ஆக, இத்திணைக்குரிய 8 பாடல்களில் 42, 97 ஆம் பாடல்களில் நிலம் பற்றிய செய்தி இடம்பெறவில்லை. 69.89 ஆம் பாடல்களில் குறிஞ்சித் திணை நிலமான மலை பயின்றுவந்துள்ளது. 21,59,81,99 ஆகிய நான்கு பாடல்களிலும் இத்திணைக்குரிய நிலமான காடு பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

| முல்லைத்திணையில் பயின்றுவந்துள்ள பிறதிணை நிலம் | திணை | நிலம் | பாடல் |
|---|---|---|---|
| | குறிஞ்சி | மலை | 69,89 |
| | | | |

### 6.1.3 மருதத்திணையில் நிலம் பயின்றுவந்துள்ள முறை

மருதத்திணைக்குரிய

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 20 | 30 | 40 | 50 | 60 | 70 | 80 | 90 | 100 |

இப்பாடல்களில் 70 ஆம் பாடலில் மட்டும் இத்திணைக்குரிய நிலமான கழனி கூறப்பட்டுள்ளது. 60 ஆம் பாடலில் பிறதிணைக்குரிய நிலம் உவமைக்காகக் கூறப்பெற்றுள்ளது. 9 பாடல்களில் 2 பாடல்கள் தவிர ஏனைய 7 பாடல்களிலும் நிலம் பற்றிய செய்தி இடம் பெறவில்லை.

### 6.1.3.1 உவமையாகப் பயின்றுவந்த பிறதிணை நிலம்

மருதத்திணையின் 60 ஆம் பாடலில் குறிஞ்சி நிலமான மலை பயின்றுவந்துள்ளது. உழவர் பயன்படுத்தும் நெற்குதிர், மலை போன்று உள்ளது என்று நெற்குதிர் மலைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. ஆகையால் மலை இப்பாடலின் நிலமாகப் பயின்றுவரவில்லை என்பதை அறியலாம்.

### 6.1.4 நெய்தல் திணையின் நிலம் பயின்றுவந்துள்ள முறை

இத்திணைக்குரிய நிலமான கடல் தொடர்பான செய்தியைப் பாடலில் கூறும்போது அந்நில மக்களான பரதவர் பற்றியும், மீன்பிடித்தல் பற்றியும், உப்புவிளை வித்தல் பற்றியும் புலவர்கள் கூறியுள்ளனர். பண்டங்கள் கடல்துறையில் இறக்குமதி செய்யப்பட்ட செய்திகளும் இத்திணைக்குரிய பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 11 | 15 | 16 | 19 | 27 | 31 | 35 | 38 |
| 45 | 49 | 54 | 58 | 63 | 67 | 72 | 74 | 78 |
| 87 | 91 | 94 | 96 | | | | | |

ஆகிய இத்திணைக்குரிய 22 பாடல்களில் 72, 94 ஆம் பாடல்களில் நிலம் பற்றிய செய்தி இடம்பெறவில்லை. இப்பாடல்கள் தவிர அனைத்துப்பாடல்களிலும் நிலம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது.

### 6.1.4.1 குறிஞ்சித்திணை மூலம் காட்சியைப் புலப்படுத்தல்

நெய்தல் திணையின் 67 ஆம் பாடலில் குறிஞ்சி நிலமான மலை பயின்று வந்துள்ளது கதிரவன் மலையில் மறைந்தான் என்ற காட்சியைக் கூறுவதற்காகப் புலவர் இப்பாடலில் மலையைக் கூறியுள்ளார்.

| திணை | நிலம் | பாடல் |
|---|---|---|
| குறிஞ்சி | மலை | 67 |

இத்திணையே நெய்தல் திணையில் பயின்று வந்துள்ள நிலமாகும். இத்திணைக்குரிய நிலமான கடல்சார் பகுதி பாடல்களில் மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் இடம்பெற்றுள்ளது.

### 6.1.5 பாலைத்திணை பயின்று வந்துள்ள முறை

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் இந்நான்கு திணைக்கும் நிலம் கூறிய தொல்காப்பியர் பாலைத்திணைக்கு நிலம் கூறவில்லை. அகப்பொருள் விளக்கத்தில் 'சுரம்' பாலையின் நிலம் என்று கூறப்பெற்றுள்ளது. இளங்கோவடிகள் முல்லையும், குறிஞ்சியும் திரிந்த நிலம் பாலை என்று கூறியுள்ளதை வைத்து பாலைக்கான நிலம் அறியப்படுகிறது. பாலைத்திணையில் 29 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை வருமாறு,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 3 | 7 | 9 | 10 | 12 |
| 14 | 18 | 24 | 26 | 28 | 29 |
| 33 | 37 | 41 | 43 | 46 | 48 |
| 52 | 56 | 62 | 66 | 71 | 73 |
| 76 | 79 | 84 | 86 | 92 | |

இத்திணையின் 10,12,24,52,56,71 ஆம் பாடல்கள் தவிர மீதுமுள்ள 22 பாடல்களிலும் பாலை நிலத்தின் தன்மைக் கூறப்பட்டுள்ளது. இத்திணைப் பாடல்களில் குறிஞ்சி நிலமும், முல்லை நிலமும் தன் நிலையிலிருந்து மாறி வெப்பம் மிகுந்து காணப்படுவதைப் பாடல்களின் வழி அறிய முடிகிறது.

### பாலை நிலத்தின் தன்மை

இப்பகுதியில் வெப்பம் மிகுந்து மரங்கள் வாடுவது வறட்சியினால் நீரின்றி விலங்குகள் துன்பப்படுவதும், செந்நாய் உண்ட உணவை மனிதர்கள் உண்டனர் என்ற செய்திகள் மூலமும் பாலையின் தன்மைப் புலப்படுகிறது.

இத்திணைப் பாடல்கள் மூலம் மழைக்காலத்தில் நிலங்கள் செழிப்பாக இருப்பதையும் வேனிற்காலத்தில் மரங்கள் பட்டு, நிழலின்றிப் பாலை நிலமாக மாறி விடுவதையும் அறியமுடிகின்றது.

## நிலங்கள் ஒப்பீடு

குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் ஆகிய நான்கு திணைக்குரிய நிலங்களையும் அந்தந்தத் திணைக்குரியவையாகப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். ஒரு திணையில் பாடல் பாடுகையில் புலவர் பிறதிணைக்குரிய நிலங்களைக் கூறியிருந்தாலும், அவற்றை உவமைக்காகவும், பிறிதொரு செய்தியைக் கூறவுமே பயன்படுத்தி உள்ளார். ஒரு திணைப் பாடலைப் பாடும் புலவர் பிறதிணைக்குரிய செய்தியைத் தான்பாடும் திணையிலும் கூறுவது என்ற முறையில் பாடல்களை இயற்றியுள்ளார். ஐந்திணைப் பாடல்களில் குறிப்பிட்ட நிலங்களை ஒப்பிட்டுப் பார்க்கும் போது நிலங்கள் பாடல்களில் மயங்கிவரவில்லை என்பதையும் பாலைத்திணை மட்டுமே குறிஞ்சியும், முல்லையும் திரிந்த நிலமாகக் காணப்படுகிறது என்பதையும் அறியமுடிகின்றது. மற்ற திணைகளில் நிலங்கள் இரண்டு நிலையில் பயன்படுத்தப்பட்டதையும் அறியமுடிகிறது. அவை,

1. உவமையாகக் கூறுதல்
2. காட்சியைப்புலப்படுத்துதல்

## பொழுது

ஐந்திணைகளிலும் இடம்பெற்ற பொழுதுகள் இங்கு ஒப்பிட்டு ஆராயப்பெறுகின்றன.

### 6.1.1 குறிஞ்சிப்பொழுது

| பாடல் எண் | பொழுது |
|---|---|
| 5 | முன்பனி |
| 22 | முன்பனி, யாமம் |
| 34 | கார்காலம் |
| 36 | யாமம் |
| 55, 68, 83<br>85, 98 | இரவு |

இத்திணையில் இடம்பெற்றுள்ள 32 பாடல்களில், 9 பாடல்கள் பொழுது பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ள பாடல்களாக அமைந்துள்ளன. “பெயலானதே வானம்” என்று 51 ஆம் பாடலிலும், “கனைப்பெயல் பொழிந்தது” என்று 53 ஆம் பாடலிலும் மழை பெய்தது என்று கூறப்பட்ட குறிப்பின் மூலம், மழை பெரும்பாலும் கார்காலத்தில் பெய்வதால், இப்பாடலையும் கார்காலப் பின்புலத்தை உடைய பாடலாகக் கருதலாம். ஆகவே முல்லைத் திணைப் பொழுது இத்திணையில் இடம் பெற்றுள்ளது எனலாம்.

### 6.1.2. முல்லையில் பொழுது

| பாடல் எண் | பொழுது |
|---|---|
| 21,42,99 | கார் |
| 54 | மாலை |
| 89 | கார், முன்பனி |

இத்திணையில் இடம்பெற்றுள்ள பாடல்கள் 8. இவற்றில் 5 பாடல்களில் பொழுது பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் நேரடியாகப் பொழுது இடம்பெற்ற பாடல்கள் 89,99 ஆம் பாடல்கள் ஆகும். மற்ற பாடல்களில் மறைமுகமாகப் பொழுதுகள் இடம் பெற்றுள்ளன. பெயல் நீர் என்று 21 ஆம் பாடலிலும் மழைபொழிந்த என்று 42 ஆம் பாடலிலும், மழை பெய்தது பற்றிக் கூறப்பட்டுள்ளதால் கார்காலம் என்பதை அறிந்துகொள்ள முடிந்தது.

54 ஆம் பாடலில் “சென்றவன் மறைய” என்று கதிரவன் மாலையில் மறைந்தது பற்றியும், அப்பொழுதில் இடம்பெற்ற காட்சிகளையும் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளதைக் கொண்டு மாலைப்பொழுது இப்பாடலில் கூறப்பட்டதை அறிந்துகொள்ள முடிகின்றது.

### 6.1.3 மருதத்தில் பொழுது

| பாடல் எண் | பொழுது |
|---|---|
| 40 | இரவு |
| 60 | விடியல் |
| 80 | விடியல், முன்பனிக்காலம் |

இத்திணையில் இடம்பெற்றுள்ள 9 பாடல்களில், 3 பாடல்களில்தான் பொழுது இடம் பெற்றுள்ளது. குறிஞ்சித் திணைக்குரிய பொழுதான இரவும், முன்பனிக்காலமும் இத்திணையின் 40,80 ஆம் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

### 6.1.4 நெய்தலில் பொழுது

| பாடல் எண் | பொழுது |
|---|---|
| 11,31 | இரவு |
| 54,58,78 | மாலை |
| 87,91 | பகல் |

இத்திணைக்குரிய 22 பாடல்களில் 7 பாடல்களில் தான் பொழுது பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இத்திணையின் பொழுதைக் குறிக்கும் "எற்பாடு" என்ற சொல்லாட்சி இப்பாடல்களில் இடம்பெறவில்லை ஆனால், மாலை, பகல் என்று பொழுதுகள் இடம்பெற்றுள்ளன.

"எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு"

(தொல்,அகத்.12)

என்பது இலக்கணம்

11ஆம் பாடலில் "நிலவு விரிந்தன்றாற்" என்று நிலவு தோன்றும் இரவு பற்றியும் 31 ஆம் பாடலில் "நிலவு மணல்" என்று உவமையாகக் கூறப்பட்ட செய்யுள் மூலம் இப்பாடல்களின் பொழுது இரவு என்று கருதப் பெறுகின்றன.

### 6.1.5 பாலையில் பொழுது

| பாடல் எண் | பொழுது |
|---|---|
| 2 | இரவு, மாலை |
| 3 | மாலை |
| 12 | விடியல் |
| 29 | வேனில் |
| 33 | மாலை |
| 37 | கார், மாலை |
| 41 | இரவு |
| 73 | வேனில், மாலை |
| 84 | முதுவேனிற் |
| 86 | முன்பனிக்காலம் |
| 92 | முதுவேனிற் |

இத்திணையில் இடம்பெற்றுள்ள 29 பாடல்களில் 11 பாடல்களில்தான் பொழுது பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இத்திணையில் மற்ற நான்கு திணைக்கு உரிய பொழுதுகளும் இடம்பெற்றுள்ளன.

இவ்ஐந்து திணைகளுக்கும் உரிய பொழுதுகள் பெரும்பான்மை அடிப்படையில் ஒவ்வொரு திணைக்கும் உரியன என்று பகுக்கப் பெற்றாலும் சில பாடல்களில் பொழுதுகள் மாறிவந்துள்ளதை மேல் குறிப்பிட்ட விளக்கங்கள் வழி அறியமுடிகின்றது.

### 6.2 கருப்பொருள்

ஐந்திணைப்பாடல்களிலும் இடம்பெற்றுள்ள கருப்பொருள்கள் இங்கு ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன அவை வருமாறு.

கருப்பொருள்களில் ஒன்றான தெய்வம் எல்லாத் திணைகளிலும் இடம்பெறவில்லை. குறிஞ்சித்திணையில் மட்டும்தான் தெய்வம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. முல்லைத் திணைக்குரிய தெய்வமான மாயோனை இத்திணையில் மலைக்கு உவமையாகப் புலவர்

"மாயோன் அன்ன மால்வரை கவாஅன்"

என்று 32 ஆம் பாடலில் கூறியுள்ளார்.

இத்திணைக்குரிய தெய்வமான முருகன் பற்றியும் 2 பாடல்களில் கூறப்பட்டுள்ளன. 47 ஆம் பாடலில் வெறியாட்டு நடத்துதல் குறிப்பிடப்பெற்றுள்ளது. முருகனுடன் இருந்த வள்ளி போல என்று தலைவியைப் பாராட்டி, தலைவன் கூறுவதாக அமைகின்றது.

**தெய்வம்**

| திணை | பாடல் | தெய்வம் |
|---|---|---|
| குறிஞ்சி | 32 | மாயோன் |
| குறிஞ்சி | 47,82 | முருகன் |

**உணவு**

ஐந்திணைப் பாடல்களிலும் அரிசிச்சோறும், கனிகளும், மீன்களும் உணவாகப் பயன்பட்டிருப்பதை அறியமுடிகிறது. மருதத் ~~முல்லைத்~~திணையிலும், நெய்தல் திணையிலும் மட்டும் மீன்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

விபரம் வருமாறு,

| திணை | பாடல் | மீன் |
|---|---|---|
| முல்லை | 60 | வரால் |
| | 70 | கெளிறு |
| நெய்தல் | 19,27,49,31,67 | இறால் |
| | 19,45,78 | சுறா |

## 6.2.1 விலங்கு

ஐந்திணைப் பாடல்களிலும் விலங்குகள் பற்றிய செய்திகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. 17 விலங்குகள் ஆய்வுக்குட்படுத்தப்பெற்ற 100 பாடல்களிலும் பயின்றுவந்துள்ளன. அவை வருமாறு,

### 6.2.1.1 குறிஞ்சி முல்லை பாலையில் மட்டும் வருபவை

இம்மூன்று திணைகளில் யானையும், மானும் மட்டும் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| திணை | யானை | மான் |
|---|---|---|
| குறிஞ்சி | 36,39,47,51 65,77,85 | 6 |
| முல்லை | 89 | 69 |
| பாலை | 7,10,18,43,62 | 37 |

(எண்கள் பாடல் எண்கள்)

### 6.2.1.2 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன

குறிஞ்சி, பாலைத் திணைப் பாடல்களில் புலியும் நாயும், பாம்பும் பயின்றுவந்துள்ளன. விபரம் வருமாறு,

| திணை | புலி | நாய் | பாம்பு |
|---|---|---|---|
| குறிஞ்சி | 36,39,47,65,85 | 82 | 75 |
| பாலை | 2,29 | 43 | 14,37,92 |

### 6.2.1.3 குறிஞ்சியில் மட்டும் வருவன

குறிஞ்சித்திணைப் பாடல்களில் மட்டும், மந்தி பன்றிபல்லி, எலி ஆகியவிலங்கினங்கள் இடம் பெற்றுள்ளன விபரம் வருமாறு,

| விலங்கு | பாடல் |
|---|---|
| மந்தி | 22,95 |
| பன்றி | 75,82,98 |
| பல்லி | 98 |
| எலி | 83 |

### 6.2.1.4 முல்லை, பாலையில் மட்டும் வருவன

முல்லை, பாலைத் திணைக்குரிய பாடல்களில் மட்டும், உடும்பு, நிரையும் இடம் பெற்றுள்ளன. விபரம் வருமாறு

| திணை | விலங்கு | பாடல் |
|---|---|---|
| முல்லை | நிரை | 69 |
| | உடும்பு | 59 |
| பாலை | நிரை | 37,92 |
| | உடும்பு | 24 |

### 6.2.1.5 முல்லை, நெய்தலில் மட்டும் வருவன

முல்லை, நெய்தல் திணைகளில் மட்டும் குதிரை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. முல்லையில் மூன்று பாடல்களிலும், நெய்தலில் ஆறு பாடல்களிலும் குதிரை பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. விபரம் வருமாறு

| திணை | பாடல் | விலங்கு |
|---|---|---|
| முல்லை | 21,42,81, | குதிரை |
| நெய்தல் | 11,19,58,63,78,91 | |

### 6.2.1.6 முல்லையில் மட்டும் வருவன

முல்லைத் திணையில் மட்டும் இடம்பெற்றவையாக முயலும் தவளையும் திகழ்கின்றன. விபரம் வருமாறு,

| பாடல் | விலங்கு |
|---|---|
| 59 | முயல் |
| 42 | தவளை |

### 6.2.1.7 மருதத்தில் மட்டும் வருவன

மருதத் திணையில் மட்டும் எருமை பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | விலங்கு |
|---|---|
| 60, 80 | எருமை |

### 6.2.1.8 நெய்தலில் மட்டும் வருவன

நெய்தல் திணையில் மட்டும் நண்டு பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. விபரம் வருமாறு,

| பாடல் | விலங்கு |
|---|---|
| 11, 35 | அலவன் |

### 6.2.2 திணைப்பாடல்களில் இடம்பெற்றுள்ள பறவைகள்

வண்டு, மயில், குருகு, கிளி, காகம், கூகை, குயில், கானவாரணம், பருந்து, புறா, அன்னம், குருவி ஆகிய 12 பறவைகள் ஆய்வுக்குட்படுத்தப்பெற்ற பாடல்களில் கருப்பொருளாகப் பயின்று வந்துள்ளன.

### 6.2.2.1 குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலையில் வருவன

இந்நான்கு திணைகளிலும் வண்டு இடம் பெற்றுள்ளது விபரம் வருமாறு

| திணை | பாடல் |
|---|---|
| குறிஞ்சி | 1,17,25,55 |
| மருதம் | 30 |
| மருதம் | 27,35 |
| பாலை | 56 |

### 6.2.2.2 மருதம், நெய்தலில் மட்டும் வருவன

இம்மூன்று திணைகளிலும் குருகு பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன விபரம் வருமாறு,

| திணை | பாடல் |
|---|---|
| மருதம் | 70 |
| நெய்தல் | 27,31,35 |
| | 54,67,74 |

### 6.2.2.3 குறிஞ்சியில் மட்டும் வருவன

குறிஞ்சித்திணையில் மட்டுமே மயில், கிளி, கூகை இம்மூன்று பறவைகளும் இடம் பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | பறவை |
|---|---|
| 13 | மயில் |
| 13,25 | கிளி |
| 83 | கூகை |

### 6.2.2.4 முல்லை பாலையில் மட்டும் வருவன

இவ்விரு திணைகளில் மட்டும் குயில் பயின்று வந்துள்ளது. விபரம் வருமாறு

| திணை | பாடல் |
|---|---|
| முல்லை | 97 |
| பாலை | 9 |

### 6.2.2.5 முல்லையில் மட்டும் வருவன

முல்லைத் திணைப் பாடலில் மட்டும் காட்டுக்கோழி தொடர்பான குறிப்புள்ளது.

| திணை | பாடல் | பறவை |
|---|---|---|
| முல்லை | 21 | கானவாரணம் |

### 6.2.2.6 நெய்தலில் மட்டும் இடம்பெற்றவை

நெய்தல் திணைப் பாடல்களில் காகம், குருவி, ஆகிய இரு பறவைகளும் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | பறவை |
|---|---|
| 31,45,49 | காகம் |
| 58 | குருவி |

#### 6.2.2.7 பாலையில் மட்டும் வருவன

பாலைத் திணைப்பாடல்களில் மட்டும் பருந்து, புறா, அன்னம் ஆகிய பறவைகள் பயின்றுவந்துள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | பறவை |
|---|---|
| 3 | பருந்து |
| 66,71 | புறா |
| 73 | அன்னம் |

### 6.2.3 திணைப்பாடல்களில் இடம் பெற்றுள்ள மரங்கள்

ஆய்வுக்குட்படுத்தப்பெற்ற பாடல்களில் 23 மரங்கள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

#### 6.2.3.1 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன

குறிஞ்சித் திணைப் பாடல்களில் சந்தனமரம், மூங்கில் மரம் ஆகிய இரண்டும் குறிப்பிடப்பட்டுள்ளன. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | மரம் |
|---|---|---|
| குறிஞ்சி | 1,5,55,54 | சந்தனமரம் |
| பாலை | 7 | சந்தனமரம் |
| குறிஞ்சி | 5,55,82,85 | மூங்கில்மரம் |
| பாலை | 28,46,62 | |

#### 6.2.3.2 குறிஞ்சி நெய்தலில் மட்டும் வருவன

குறிஞ்சி, நெய்தல் திணைகளுக்குரிய பாடல்களில் பலாமரம் இடம்பெற்றுள்ளது விபரம் வருமாறு,

| திணை | பாடல் | மரம் |
|---|---|---|
| குறிஞ்சி | 44,51,77 | பலாமரம் |
| நெய்தல் | 26 | |

### 6.2.3.3 குறிஞ்சியில் மட்டும் வருவன

| பாடல் | மரம் |
|---|---|
| 51 | வேங்கைமரம் |
| 95 | அத்தி |
| 82 | நாகமரம் |

இப்பாடல்களின் அடிகளில், மேலே குறிப்பிட்ட மூன்று மரங்களும் இடம் பெற்றுள்ளன.

### 6.2.3.4 நெய்தல் பாலையில் மட்டும் வருவன

| திணை | பாடல் | மரம் |
|---|---|---|
| நெய்தல் | 4,31,49,63,67, 74,78,87,91,94,96 | புன்னை |
| பாலை | 76 | புன்னை |
| நெய்தல் | 87 | நெல்லிமரம் |
| பாலை | 3 | நெல்லிமரம் |

இவற்றில் நெய்தல் திணையில் புன்னைமரம் மிகுதியான பாடல்களில் இடம்பெற்றுள்ளது. பாலையில் ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது. நெல்லிமரம் இரு பாடல்களில் இடம்பெற்றள்ளது.

### 6.2.3.5 நெய்தலில் மட்டும் இடம்பெற்றவை

| பாடல் | மரம் |
|---|---|
| 19,49,78 | தாழை |
| 54,74 | கண்டல் |
| 35 | நாவல்மரம் |
| 54,74,96 | ஞாழல் |

நெய்தல் திணைப் பாடல்களில் மட்டும் இடம்பெற்றுள்ள மரங்களாகத்

தாழை, கண்டல், நாவல், ஞாழல் ஆகியவை திகழ்கின்றன.

### 6.2.3.6 பாலையில் மட்டும் வருவன

ஈங்கை, வேப்பம், விளா, கொன்றை, ஓமை, ஆலம் ஆகிய மரங்களும் பருத்திச்செடியும் பாலைத்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | மரம் |
|---|---|
| 2,79 | ஈங்கை |
| 3 | வேப்பமரம் |
| 12,24 | விளாமரம் |
| 41 | பருத்தி |
| 46 | கொன்றை |
| 84 | ஓமை |
| 76 | ஆலமரம் |

### 6.2.4 திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள மலர்கள்

ஐந்திணைப் பாடல்களிலும், காந்தள், குவளை, நெய்தல், ஆம்பல், வேங்கை, கோடற்பூ, முல்லை, கடம்பம், புன்னை, பகன்றை, செம்முருக்கு, நீலமலர், தாழம்பூ, கொன்றை, கோங்கம், பிடவம், அதிரல், பாதிரி,நறவம் ஆகிய இவ் 19 மலர்களும் இடம்பெற்றுள்ளன.

### 6.2.4.1 குறிஞ்சி முல்லை பாலையில் மட்டும் வருவன

காந்தள் மலர் மூன்று திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | மலர் |
|---|---|---|
| குறிஞ்சி | 17,34,85 | |
| முல்லை | 69,99 | காந்தள் |
| பாலை | 14,29 | |

### 6.2.4.2 குறிஞ்சி முல்லையில் மட்டும் வருவன

குறிஞ்சி முல்லைத் திணைப் பாடல்களில் முல்லை மலர்பயின்று வந்துள்ளது. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | பூ |
|---|---|---|
| குறிஞ்சி | 61 | |
| முல்லை | 54,69 | முல்லை |

### 6.2.4.3 குறிஞ்சி மருதத்தில் மட்டும் வருவன

இவ்விரு திணைகளிலும் ஆம்பல், கடம்பம் மலர்கள் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | பூ |
|---|---|---|
| குறிஞ்சி | 6,34 | ஆம்பல் |
| மருதம் | 20,100 | கடம்பம் |

### 6.2.4.4 குறிஞ்சி நெய்தலில் மட்டும் வருவன

இவ்விரு திணைகளிலும் நெய்தல் மலர் இடம்பெற்றுள்ளது. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | மலர் |
|---|---|---|
| குறிஞ்சி | 8,23 | |
| நெய்தல் | 27,96 | நெய்தல் |

### 6.2.4.5 குறிஞ்சி பாலையில் மட்டும் வருவன

குறிஞ்சி, பாலைத்திணைப் பாடல்களிலும் வேங்கை, குவளை மலர்கள் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு

| திணை | பாடல் | பூ |
|---|---|---|
| குறிஞ்சி | 1,6,24,77,85<br>13 | குவளை<br>வேங்கை |
| பாலை | 37<br>28 | குவளை<br>வேங்கை |

#### 6.2.4.6 குறிஞ்சியில் மட்டும் வருவன

குறிஞ்சித் திணையில் மட்டும் கோடற், நறவம் பூக்கள் இடம் பெற்றுள்ளன. விபரம் வருமாறு

| பாடல் | மலர் |
|---|---|
| 44 | கோடற்பூ |
| 25 | நறவம் பூ |

#### 6.2.4.7 முல்லையில் மட்டும் வருவன

முல்லைத் திணையில் மட்டும் கொன்றை, பிடவம் மலர்கள் இடம் பெற்றுள்ளன. விபரம் வருமாறு,

| பாடல் | பூ |
|---|---|
| 99 | கொன்றை |
| | பிடவம் |

#### 6.2.4.8 நெய்தல் பாலையில் மட்டும் வருவன

நெய்தல் திணைப் பாடல்களில் புன்னைப்பூப் பற்றி மிகுதியான குறிப்புகள் உள்ளன. பாலையில் குறைவாக உள்ளன. விபரம் வருமாறு,

| திணை | பாடல் | பூ |
|---|---|---|
| நெய்தல் | 4,31,49,63,67<br>74,78,87,91,94,96 | புன்னை |
| பாலை | 76 | |

#### 6.2.4.9 நெய்தலில் மட்டும் வருவன

நெய்தல் திணையில் தாழைப்பூ இடம் பெற்றுள்ளது. விபரம் வருமாறு,

| பாடல் | பூ |
|---|---|
| 19 | தாழை |

### 6.2.4.10 பாலையில் மட்டும் வருவன

இத்திணையில் கோங்கம், அதிரல், பாதிரி, செம்முருக்கு, பகன்றை மலர்கள் இடம்பெற்றுள்ளன.

| பாடல் | பூ |
|---|---|
| 48 | கோங்கம் |
| 52 | அதிரல்பாதிரிப்பூ |
| 73 | செம்முருக்கு |
| 86 | பகன்றை |

இவ்வாறு ஐந்திணைகளின் கருப்பொருட்களை ஒப்பிட்டு பார்க்கும் போது குறிஞ்சி, முல்லை, பாலை, மூன்று திணைகளிலும் ஒற்றுமைக் காணப்படுகிறது. குறிஞ்சி முல்லைக்குரிய கருப்பொருட்கள் பாலையில் இடம்பெற்றுள்ளதிலிருந்து குறிஞ்சியும், முல்லையும் தன் நிலையிலிருந்து மாறுபட்ட போது, பாலைத் தன்மை ஏற்பட்டிருக்கிறது என்பதை இவ்ஒப்பீட்டின் மூலம் அறியமுடிகின்றது.

## 6.3 பயின்றுவந்துள்ள உரிப்பொருள்கள்

உரிப்பொருள்கள் தலைவன் தலைவியின் மனநிலையை வெளிக்காட்டும் கருவியாக அமைந்துள்ளன. இதைத் தொல்காப்பியரின் புணர்தல், பிரிதல் இருத்தல், இரங்கல், ஊடல் என்ற ஐந்து உரிப்பொருள்களின் வழி அறியலாம்.

### 6.3.1 குறிஞ்சித்திணை உரிப்பொருள்

குறிஞ்சித்திணையின் உரிப்பொருள் புணர்தல். இதை இரண்டாகப் பிரிக்கலாம்,

களவில் நிகழ்தல்

கற்பில் நிகழ்தல்

இவற்றில் களவின் புணர்ச்சியைக் கீழ்வருமாறு இரண்டாகப் பிரிப்பர்.




மெய்யுறுப்புணர்ச்சியில் உள்ள கூறுகளை அவத்தை என்பர்.

நற்றிணையின் 32 பாடல்களிலும் களவு பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. களவுக்குரிய மெய்யுறு புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி நற்றிணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது. தொடர்பான விபரம் வருமாறு,

| பா. எண் | உரிப்பொருள் |
|---|---|
| 1. | தலைவன் சொன்ன சொல் தவறமாட்டான், ஆகையால் என்னை விட்டுப்பிரியமாட்டேன் என்று கூறும், தலைவியின் நம்பிக்கை. |
| 5 | தோழி தலைவியை ஆற்றுவித்தல் |
| 8 | தலைவன், தலைவியின் நலத்திணைக் கூறி அவள் தாய், தந்தையரைப் பாராட்டுவது இப்பாடலில் கூறப்பட்டுள்ளது. இது |

| | |
|---|---|
| | இயற்கைப் புணர்ச்சியில் குறிப்பிடப்பட்ட ''நன்னய முறைத்தல்'' என்பதற்குத் சான்றாக அமைகிறது. |
| 13 | தலைவியின் களவை அறிந்த தோழி கூற்றாக அமைகிறது. |
| 17 | தலைவன் மீது கொண்ட களவைத்தன் நிலை மறந்து அன்னையிடம் கூற நினைத்தேன் என்று தோழியிடம் கூறுவதாக அமைந்த இப்பாடல் ''மறத்தல்'' என்று அவத்தைக்குச் சான்றாக அமைகிறது. |
| 22. | தலைவியிடம், தலைவன் வந்தனன் என்று கூறி மகிழ்விக்கிறாள் தோழி. |
| 23. | தலைவி மெலிந்து காணப்படுவதைத் தோழி, தலைவனிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. |
| 25 | தலைவன் உடனான களவு, பண்பில்லாதது என்று சொல்லி தலைவி வருந்துகிறாள். |
| 32 | தோழி, தலைவியிடம் நட்புக்கொண்ட பின் ஆராய்தல் கூடாது என்று கூறித்தலைவியின் மனநிலையை மாற்ற முயற்சி செய்தல். |
| 34 | தலைவியின் உடல் மாறுபாட்டைக் கண்டு அன்னை வெறியாட்டு நடத்துதல். |
| 36 | தலைவியின் களவு அறிந்து, மக்கள் அலர் தூற்றுவதனால் வருந்தும் தலைவியின் மனநிலை. |
| 39 | தலைவன் தலைவியின் களவுக்காலச் சந்திப்பு. சொல்வழிப்படுத்தல் என்ற இயற்கைப் புணர்ச்சியைப் இப்பாடலில் அறியமுடிகின்றது. |
| 44 | தலைவன் தலைவியிடம் கொண்ட வேட்கை. |
| 47 | தலைவிக்கு ஏற்பட்ட பசலையை இப்பாடல் சுட்டுகிறது. |
| 51 | தலைவன் வரும் வழியை நினைத்து வருந்துகிறேன். இதை அறியாத அன்னை வெறியாட்டு நிகழ்த்துகிறாள் என்று தலைவி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. |

| | |
|---|---|
| 53 | அன்னை நின் களவை அறிந்தாளோ? என்ற ஐயம் தோழிக்கு ஏற்படுவதை இப்பாடலின் வழி அறியலாம். |
| 55 | ''பொறிகிளர் ஆகம் புல்லத் தோள் சேர்பு''<br>என்ற அடியின் வழி களவில் புணர்ச்சி நடப்பது மெய்யென்பதை அறியமுடிகிறது. |
| 57 | ''மாண்நலந் தொலைவே'' என்ற அடியின் வழித் தலைவியின் நலம் கூறுவதை அறியமுடிகிறது. |
| 61 | தலைவி, தலைவனை நினைந்து உறங்காமல் இருப்பது ஒருதலையுள்ளுதல் என்ற நூற்பாவிற்குச் சான்றாக அமைகிறது. |
| 64 | தலைவன் பிரிந்து சென்றதால் கோபம் அடைந்த தலைவி குருகிடம் தன்நிலையைக் கூறுவதை அறியலாம். |
| 65. | தலைவன் வருவான் என்றவளின் விரிச்சிக் கேட்டுத்தோழி தலைவியிடம் கூறல். |
| 68 | - |
| 75 | தலைவியின் நோக்குத் தன்னைக் களவில் ஈடுபடுத்தியது என்று தலைவன் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. |
| 77 | தலைவியின் நோக்குத் தலைவனை மகிழ்வித்தது என்று கூறுதல்.<br>75, 77 இரண்டு பாடல்களும் காட்சி என்ற அவத்தைக்கு உட்படுத்தப்பட்டது என்பதை அறியலாம். |
| 82 | தலைவியின் நலன் புனைந்துரைத்தல் |
| 83 | இரவு நேரத்தில் தலைவன் சந்திக்க வருதல் |
| 85 | தலைவனின் வருகையைத்தோழி கூறுதல் |
| 88 | தோழி தலைவியை ஆற்றுவித்தல் |
| 93 | தலைவியின் மெலிவைத் தலைவனிடம் தோழி கூறுதல். |
| 95 | தலைவனின் வேட்கை. |
| 98 | இரவில் நிகழும் சந்திப்பு. |

இதுவரை கூறப்பட்டவற்றின் வழி இயற்கைப் புணர்ச்சியும், மெய்யுறுபுணர்ச்சியும் உடைய களவுப்பாடல்களாவே 32 பாடல்களும் திகழ்கின்றன என்பதை அறியமுடிகின்றது.

### 6.3.2 முல்லையில் உரிப்பொருள்

முல்லைத்திணையின் 8 பாடல்களிலும் இருத்தலே உரிப்பொருளாகப் பயின்று வந்துள்ளது. இதை இரண்டு நிலையில், பிரிக்கலாம். அவை,

1. தலைவன் நேரில் விரைந்து தலைவியைக் காணவருதல்.
2. தலைவி தலைவன் வருகைக்காகக் கார்காலத்தை எதிர்நோக்கிக் காத்திருத்தல்.

### 6.3.3 மருதம் உரிப்பொருள்

மருதத் திணையின் ஒன்பது பாடல்களிலும் ஊடலே உரிப்பொருளாக உள்ளது. இத்திணைப் பாடல்களில் தலைவன் பரத்தையர் தொடர்பு கொண்டிருப்பதைச் சுட்டிக்காட்டி தலைவி ஊடல் கொள்கிறாள். 40 ஆம் பாடலில் தலைவன், இரவில் தன் இல்லத்திற்கு வந்து, தலைவி அறியாமல் தன் மகனைப் பார்த்துச் செல்கிறான். இதனால் தலைவி ஊடல் கொள்கிறாள்.

### 6.3.4 நெய்தல் உரிப்பொருள்

நெய்தல் திணையின் 22 பாடல்களிலும் தலைவனை நினைத்து வருந்தும் இரங்கல் நிமித்தத்தை உடையனவாகவே உள்ளன.

### 6.3.5 பாலை உரிப்பொருள்

பாலத்திணையின் 29 பாடல்களிலும் தலைவனின் பிரிவு இரண்டு நிலையில் உள்ளதை அறியமுடிகின்றது.அவை,

1. தலைவன் தலைவியை விட்டுப்பிரிந்து செல்லல்.
2. தலைவன் தலைவியை உடன்கொண்டு தமர்வரைப் பிரிந்து செல்லல்.

ஆக, ஐந்திணைப்பாடல்களிலும் உரிப்பொருள்கள் சுட்டப்பட்டுள்ளன. நற்றிணையின் 100 பாடல்களிலும் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற ஐந்து உரிப்பொருள்களும் அந்தந்தத் திணைக்குரிய நிலையில் இடம்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

இந்த இயல்வழி அறியலாகும் கருத்துக்கள் வருமாறு

- ஐந்திணைகளிலும், ஒரு திணைக்குரிய நிலம் மற்றொரு திணையில் உவமைக்காகவும், காட்சியைப் புலப்படுத்தவும் பயின்றுவந்துள்ளன. என்பதை இவ்வியலின் வழி அறிந்துகொள்ள முடிந்தது. அவ்வாறு பயின்று வந்த பாடல்கள் 6,8,17,23,75,88,69,79,60,67 ஆகிய பாடல்களாகும்.

- இரவு முல்லைத்திணைத் தவிர நான்கு திணைகளிலும், மாலை குறிஞ்சித் தவிர முல்லை மருதம், நெய்தல், பாலை ஆகிய நான்கு திணைகளிலும் இடம்பெற்றுள்ளதை அறிந்து கொள்ளலாம்.

- குறிஞ்சியில் மட்டும் இடம்பெற்றவையாக மந்தி, பன்றி, பல்லி, எலி ஆகியனவும், முல்லையில் மட்டும் இடம்பெற்றவையாக முயல், தவளையும், மருதத்தில் மட்டும் இடம்பெற்றவையாக எருமையும் நெய்தலின் மட்டும் இடம்பெற்றவையாக அலவனும் பாடல்களில் பயின்றுவந்துள்ளதை அறியலாம்.

- குறிஞ்சியில் மட்டும் மயில், கிளி, கூகை ஆகியபறவைகளும், முல்லையில் மட்டும் கானவாரணமும் நெய்தலில் மட்டும் காகம், குருவி ஆகியவையும் பாலையில் மட்டும் பருந்து, புறா, அன்னம் ஆகியவையும் பயின்றுவந்துள்ளதை அறிந்துகொள்ளமுடிகிறது.

- வண்டு, முல்லைத்திணை நீங்கலாக நான்கு திணைகளிலும் பயின்றுவந்துள்ளதை 1,17,25,55,30,27,35,56 ஆம் பாடல்களின் வழி அறியலாம்.

- குறிஞ்சியில் மட்டும் வேங்கை, அத்தி, நாகமரம் ஆகிய மரங்களும் நெய்தலில் மட்டும் தாழை, கண்டல், நாவல், ஞாழல் ஆகிய மரங்களும் பாலையில் மட்டும் ஈங்கை, வேப்பமரம், விளாமரம், பருத்தி, கொன்றை, ஓமை, ஆலமரம் ஆகிய மரங்களும் பயின்றுவந்துள்ளதை அறியலாம்.

❖ குறிஞ்சித்திணையில் மட்டும் இடம்பெற்ற பூக்களாக நறவம், கோடற்பூவும், முல்லையில் மட்டும் கொன்றை பிடவம் ஆகிய மலர்களும், நெய்தலில் மட்டும் இடம்பெற்றவையாகத் தாழையும், பாலையில் மட்டும் கோங்கம், அதிரல், பாதிரி, செம்முருக்கு, பகன்றை ஆகிய மலர்களும் பாடல்களில் பயின்றுவந்துள்ளதை இவ்வியலின் வழி அறியலாம்.

❖ ஐந்திணைக்கும் உரிய உரிப்பொருள்களில் குறிஞ்சிக்குரிய புணர்ச்சி நிமித்தம், களவுப் புணர்ச்சியாக 32 பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

❖ முல்லைத்திணையில் தலைவன் தலைவிக்காகக் காத்திருத்தல், மருதத்தில் தலைவி தலைவன் மீது கொண்ட ஊடல், நெய்தலில் தலைவி தலைவனை நினைத்து வருந்தல், பாலையில் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லல் ஆகியவை பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

# முடிவுரை

நற்றிணையில் முதல், கரு, உரிப்பொருள்கள் பயின்றுவந்துள்ள முறை என்ற ஆய்வின் வழி அறியப்பட்ட கருத்துக்கள் வருமாறு,

அகப்பாடலின் கற்பனை ஊற்றாக இருப்பது முதல், கரு, உரிப்பொருள்கள்தான் என்பதைப் புலவர்களின் பாடல்கள் புலப்படுத்துகின்றன. நிலத்தின், காலத்தின் தன்மைக்கேற்பத் தலைவன் தலைவியின் மனஉணர்வைப் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்று ஐந்து நிமித்தங்களாகப் பிரித்துள்ளதிலிருந்து நிலத்தன்மையும், காலத்தின் சூழலும் மனித உணர்வுகளை இன்ப, துன்பங்களுக்கு ஆட்படுத்து வனவற்றுள் குறிப்பிடத்தக்க இடம் வகிக்கின்றன என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

மரம், செடி, கொடிகள் அந்நிலத்தின் செழிப்பையும்., வளமையையும் புலப்படுத்துவனவாக அமைகின்றன. அஃறிணை உயிர்களான பறவை, விலங்குகள் அன்பு வயப்பட்டனவாகப் பாடல்களில் சுட்டப்பெற்றுள்ளன. தலைவன் தலைவியரான உயர்திணைப் பாற்பட்டவர்கள் அன்பு நிலையில் வாழ்க்கையைத் தொடங்கவேண்டும் என்ற உயர்ந்த கருத்தைப் புலப்படுத்தவே, அஃறிணை உயிர்களின் அன்பைப் புலவர்கள் பாடல்களில் படைத்துள்ளனர் எனலாம்.



ஐந்திணைகளுக்கும் உரிய மலை, காடு, வயல், கடல், சுரம் ஆகிய நிலங்களும், முன்பனிக்காலம், கார்காலம், யாமம், இரவு, மாலை, வைகறை, விடியல், இளவேனிற், முதுவேனிற், பின்பனி ஆகிய பொழுதுகளும் முதற்பொருள்களாகப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சித்திணைக்குரிய 32 பாடல்களில் பிறதிணைக் குரிய நிலங்கள் 6,8,17,23,75,88 ஆம் பாடல்களில் உவமைகளாகப் பயின்றுவந்துள்ளன.

முல்லைத்திணைக்குரிய 8 பாடல்களில் 42, 92,-ஆம் பாடல்களில் நிலம் பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை. 69, 89-ஆம் பாடல்களில் குறிஞ்சி நிலம் பயின்று வந்துள்ளது.

மருதத்திணைக்குரிய 9 பாடல்களில் 70-ஆம் பாடலில் இத்திணைக்குரிய நிலமான கழனியும், 60-ஆம் பாடலில் குறிஞ்சிக்குரிய நிலமும் பயின்றுவந்துள்ளன.

நெய்தல் திணைக்குரிய 22 பாடல்களில் 72,94ஆம் பாடல்கள் தவிர அனைத்துப் பாடல்களிலும் நிலம் இடம்பெற்றுள்ளது. இத்திணையில் 67-ஆம் பாடலில் காட்சியைப் புலப்படுத்துவதற்காகக் குறிஞ்சியின் நிலம் பயின்றுவந்துள்ளது

பாலைத்திணையின் 29-பாடல்களில் 10,12,24,52,56,71,86-ஆம் பாடல்கள் தவிர மீதமுள்ள 22 பாடல்களிலும் பாலை நிலத்தின் தன்மைக் கூறப்பட்டுள்ளது.



விலங்குகளாகப் புலி, யானை, மான், மந்தி, பன்றி, நாய், எலி, தவளை, உடும்பு, முயல், பசு, எருமை, மீன், நண்டு, பாந்தள் ஆகியவையும் பறவைகளாக மயில், கிளி, கூகை, வண்டு, குருகு, கானவாரணம் ஈயல், குயில், குருவி, காகம் ஆகியவையும் மரங்களாக மூங்கில், சந்தனம்,. ஆசினி, நெய்தல், வேங்கை, நாகமரம், வெண்கடம்பு, புன்னை, தாழை, ஞாழல், பனை, நெல்லி, கண்டல், ஈத்தமரம், விளாமரம், ஓமை ஆகியவையும், மலர்களாகக் குவளை, காந்தள், நெய்தல், ஆம்பல், நறவம், முல்லை, பிடவம், கொன்றை, ஆகியவையும், மக்கள் பெயர்களாக வெற்பன், சேர்ப்பன், உழவன், குறவர், நாடன், கொடிச்சி ஆகியவையும் கருப்பொருள்களாகப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சி முல்லை பாலை ஆகிய மூன்று திணைகளிலும் யானை, மான் இடம்பெற்றுள்ளன. குறிஞ்சி, பாலையில் புலி, நாய் பாம்பு ஆகிய விலங்குகள் இடம் பெற்றுள்ளன.

குறிஞ்சித் திணையில் மட்டும் மந்தி, பன்றி, பல்லி, எலி ஆகியவை இடம்பெற்றுள்ளன. முல்லை, பாலையில் உடும்பும், நிரையும் முல்லை நெய்தலில் குதிரையும் முல்லையில் மட்டும் முயலும் தவளையும் இடம்பெற்றுள்ளன.

மருதத்தில் மட்டும் எருமை இடம்பெற்றுள்ளது. நெய்தலில் மட்டும் அலவன் இடம்பெற்றுள்ளது.

முல்லைத்திணை தவிர நான்கு திணைகளிலும் வண்டு பற்றிய செய்திகள் இடம்பெற்றள்ளன. மருதம், நெய்தலில் இருக்கும், குறிஞ்சியில் மயில், கிளி, கூகையும் முல்லை, பாலையில் குயிலும் முல்லையில் மட்டும் கானவாரணமும், நெய்தலில் மட்டும் காகமும், குருவியும் பாலையில் மட்டும், பருந்து, புறா, அன்னமும் இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சி பாலையில் சந்தனமரமும், மூங்கில் மரமும் இடம்பெற்றுள்ளன. குறிஞ்சி நெய்தலில் பலாமரமும் குறிஞ்சியில் மட்டும் வேங்கை, அத்தி நாகமரமும், நெய்தல் பாலையில் புன்னை, நெல்லிமரமும் நெய்தலில், மட்டும் தாழை, கண்டல், நாவல், ஞாழல் மரமும், பாலையில் மட்டும் ஈங்கை, வேப்பமரம், விளாமரம், பருத்தி, கொன்றை, ஓமை, ஆலமரம் ஆகிய மரங்களும் இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சி, முல்லை, பாலையில் காந்தள் மலரும், குறிஞ்சி முல்லையில், முல்லை மலரும், குறிஞ்சி மருதத்தில் ஆம்பல், கடம்பம் மலர்களும், குறிஞ்சி நெய்தலில் நெய்தல் மலரும், குறிஞ்சி பாலையில் குவளை, வேங்கை மலர்களும், குறிஞ்சியில் கோடற், நறவம் பூக்களும், முல்லையில் கொன்றை பிடவம் மலர்களும், நெய்தல் பாலையில் புன்னை மரமும், நெய்தலில் தாழை மலரும், பாலையில் கோங்கம், அதிரல், பாதிரிப்பூ, செம்முருக்கு, பகன்றை ஆகிய மலர்களும் இடம் பெற்றுள்ளன.

ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்ற பாடல்களில் குறிஞ்சியில் மாயோன், முருகன் கடவுளர்களாக இடம்பெற்றுள்ளனர். ஏனைய திணைகளில் வேறுஎந்தக் கடவுளரும் இடம்பெறவில்லை.



குறிஞ்சித்திணையில் களவுப் புணர்ச்சியே இடம்பெற்றுள்ளது என்பதைப் பாடல்களின் வழி அறிய முடிகிறது. களவுப் புணர்ச்சியை மெய்யுறு புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி என்று பிரித்து விளக்குவதற்கு ஏற்ப இத்திணைப் பாடல்களில் புணர்ச்சி இடம்பெற்றுள்ளது.

முல்லைத் திணையின் நிமித்தம் இருத்தல் என்பதற்கேற்பத் தலைவி தலைவனுக்காகக் காத்திருத்தலை இத்திணைப்பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

மருதத்திணையில் தலைவன் பரத்தையருடன் தொடர்பு கொண்டிருப்பதாலும், தலைவியைத் தலைவன் காணவராததாலும் தலைவி, தலைவன் மீது ஊடல் கொண்டுள்ளதைப் பாடல்களின் வழி அறியலாம்.

நெய்தல் திணையில் தலைவி தலைவனை நினைத்து வருந்தும் இரங்கல் நிமித்தம் இடம் பெற்றுள்ளது.

பாலைத்திணைக்குரிய பிரிதல் நிமித்தம் இத்திணைப் பாடல்களில் தலைவன் தலைவியை விட்டுப் பரிந்து செல்லல், தலைவன் தலைவியை உடன்கொண்டு தமர்வரைப் பிரிந்து செல்லல் என்ற இரண்டு நிலையில் இடம்பெற்றுள்ளதை அறியலாம்.

<u>எதிர்காலத்தில்</u>

நற்றிணை 100 பாடல்களில் உள்ள முதல், கரு, உரிப்பொருள்கள்தான் இவ்வாய்வேட்டில் ஆராயப்பட்டன. மற்ற பாடல்களின் முதல், கரு உரிப்பொருள்களை ஆராய்ந்து ஆய்ந்தவற்றை ஒட்டுமொத்த தொகுப்பாக வெளியிடலாம்.

நற்றிணையில் வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளதால் 'நற்றிணையில் வரலாற்றுச் செய்திகள்' என்று தனி ஆய்வு மேற்கொள்ளலாம்.

# துணை நூற்பட்டியல்


**முதன்மை நூல்**

மகாதேவன். கதிர்., (உ.ஆ) — நற்றிணை
கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307
2003.

**துணைநூற்கள்**

வரதராசன்.மு., — தமிழ் இலக்கிய வரலாறு
சாகித்ய அகாதமி,
குணா பில்டிங்ஸ்,
சென்னை.
1972.

சாமிநாதையர். உ.வே., (பதி.ஆ) — பத்துப்பாட்டு
ஸ்ரீ.தியாகராச விலாச வெளியீடு
கதிர் பதிப்பகம்
சென்னை
ஆறாம் பதிப்பு

சாமி.பி.எல்.., — சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 1.
1976.

சாமி.பி.எல்., — சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
2/140, பிரகாசம் சாலை,
சென்னை - 1.

| | |
|---|---|
| திருக்குறள் | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>154, டி.டி.கே.சாலை<br>சென்னை - 600018.<br>2002. |
| தொல்காப்பியம் | சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம்<br>154, டி.டி.கே.சாலை,<br>சென்னை - 600018.<br>2000. |
| நாற்கவிராச நம்பி | அகப்பொருள் விளக்கம்<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>154, டி.டி.கே.சாலை,<br>சென்னை - 18.<br>2001. |
| புலியூர்க் கேசிகன் (உ.ஆ) | சிலப்பதிகாரம்<br>பாரி நிலையம்<br>184, பிராட்வே<br>சென்னை - 600108<br>1958. |
| மாணிக்கம் வ.சுப., | தமிழ்க் காதல்<br>மெய்யப்பன் பதிப்பகம்<br>53, புதுத்தெரு,<br>சிதம்பரம் - 608001.<br>2002. |
| சோமசுந்தரனார் பொ.வே., (உ.ஆ) | மலைபடுகடாம்<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>522. டி.டி.கே.சாலை, ஆள்வார் பேட்டை<br>சென்னை - 18.<br>2004. |

**பார்வை நூல்கள்**


| | |
|---|---|
| சாமிநாதையர் உ.வே., (உ.ஆ) | குறுந்தொகை<br>கபீர் அச்சுக்கூடத்திற்<br>பதிப்பிக்கப் பெற்றது<br>சென்னை.<br>இரண்டாம் பதிப்பு |
| சோமசுந்தரனார் பொ.வே., (உ.ஆ) | ஐங்குறுநூறு<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>1/140, பிரகாசம் சாலை,<br>சென்னை - 1. |

## அட்டவணை - ஒன்று
## குறிஞ்சித் திணைப்பாடல்களில் கருப்பொருட்கள்

| பா எண் | தெய்வம் | உணவு | விலங்கு | மரம் | பறவை | தொழில் | யாழ் | பூ | நீர் | பறை | தலைமகள் | தலைமகன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | தேன் | - | சந்தன மரம் | வண்டு | - | - | தாமரை | - | - | - | - |
| 5 | - | - | - | சந்தனமரம் | - | - | - | - | சுளைநீர் | - | - | குறவர் |
| 6 | - | கனிகள் | மான் | - | - | - | - | ஆம்பல் குவளை | - | - | - | - |
| 8 | - | - | - | நெய்தல் | - | - | - | நெய்தல் | - | - | - | - |
| 13 | - | - | - | - | மயில்,கிளி | - | - | வேங்கை பூ | - | - | - | - |
| 17 | - | தேன் | - | - | வண்டு | - | - | காந்தள் | அருவி | - | - | வெற்பன் |
| 22 | - | நெல்அரிசி | மந்தி,கடுவன் | - | - | - | - | - | - | - | கொடிச்சி | - |
| 23 | - | - | - | - | - | - | - | நெய்தல் மலர் | - | - | - | - |
| 25 | - | - | - | - | வண்டு, கிளி | - | - | நறவம் மலர் | - | - | - | - |
| 32 | மாயோன் | - | - | - | - | - | - | - | அருவி | - | - | - |
| 34 | - | - | - | - | - | - | - | காந்தள் குவளை கடம்பம் | சுனை,அருவி | - | - | நாடன் |
| 36 | - | - | புலி, களிறு, பிடி | - | - | - | - | - | அருவி | - | - | - |
| 39 | - | - | புலி,யானை | - | - | - | - | - | | முரசு | - | - |
| 44 | - | - | - | ஆசினி மரம் | - | - | - | கோடற் பூ | அருவி | - | - | குறவர் |
| 47 | முருகன் | - | களிறு உழுவை புலி பிடி | -- | - | - | - | - | - | - | - | - |
| 51 | - | - | யானை | வேங்கை ஆசினி மூங்கில் | - | - | - | குளவி | - | - | - | - |
| 53 | - | - | - | - | - | - | - | - | காட்டாறு | - | - | - |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 55 | - | - | | மூங்கில் சந்தனமரம் | வண்டு | - | - | - | - | - | - | நாடன் |
| 57 | - | - | சிங்கம், பசு, மந்தி, வேங்கை | வேங்கை | - | - | - | - | - | - | - | நாடன் |
| 61 | - | - | - | - | - | - | - | முல்லை | - | - | - | - |
| 64 | - | - | - | சந்தன மரம் | - | - | - | - | - | | - | குறவர் |
| 68 | - | - | - | - | - | - | - | - | - | - | - | - |
| 65 | - | - | புலியானை | - | | வேட்டைத் தொழில் | - | - | கான்யாறு அருவி | - | - | - |
| 75 | - | - | கோட்டு (பன்றி) பாம்பு | - | - | - | - | - | - | - | - | - |
| 77 | - | - | யானை | பலாமரம் | - | - | - | குவளை | அருவி | - | - | - |
| 82 | முருகன் | - | நாய், பன்றி | மூங்கில் நாகமரம் | - | - | - | - | - | - | கொடிச்சி | - |
| 83 | - | நெய்ச்சோறு | எலி | - | கூகை | - | - | - | - | - | - | - |
| 85 | - | - | புலி யானை | மூங்கில் | - | - | - | குவளை காந்தள் | - | - | கொடிச்சி | நாடன் |
| 88 | - | - | - | - | - | - | - | - | அருவி | - | - | - |
| 93 | - | தினைகள் | - | - | - | - | - | - | அருவி | - | - | நாடன் |
| 95 | - | - | மந்தி | அத்தி மரம் | - | கழைக் கூத்து | - | - | - | தாளம் | கொடிச்சி | குறவர் |
| 98 | - | - | முள்ளம் பன்றி பல்லி, பன்றி | - | - | - | - | - | - | - | - | நாடன் |

## அட்டவணை - இரண்டு
## முல்லைத்திணைப் பாடல்களில் கருப்பொருள்கள்

| பா எண் | தெய்வம் | உணவு | விலங்கு | மரம் | பறவை | தொழில் | யாழ் | பூ | நீர் | பறை | தலைமகள் | தலைமகன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 21 | - | - | குதிரை | - | கான வாரணம் பேடை | - | - | - | பெயல் நீர் | - | - | - |
| 42 | - | - | பல்கிளை தவளை குதிரை | - | - | - | - | போது | மழை | - | - | - |
| 59 | - | - | உடும்பு நுணல் முயல் | - | ஈயல் | வேட்டைத் தொழில் | - | முல்லை | - | - | வேட்டுவன் | - |
| 69 | - | - | மாஎருத்து இரலை (மான்) | - | பார்ப்பு | ஆநிரை மேய்ததல் | - | முல்லை தோன்றி | - | - | - | - |
| 81 | - | - | புரவி | - | - | - | - | - | - | - | - | - |
| 89 | - | - | யானை | - | - | - | - | - | மழை | - | - | - |
| 97 | - | - | - | - | குயில் குருகு | - | - | - | ஆறு | - | - | - |
| 99 | - | - | - | - | - | - | - | பிடவம் கொன்றை காந்தள் | - | - | - | - |

## அட்டவணை - மூன்று
## மருதத் திணைப்பாடல்களில் கருப்பொருட்கள்

| பா எண் | தெய்வம் | உணவு | விலங்கு | மரம் | பறவை | தொழில் | யாழ் | பூ | நீர் | பறை | தலைமகள் | தலைமகன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 20 | - | - | - | வெண் கடம்ப மரம் | - | - | - | வெண் கடம்பப் பூ | - | - | மகிழ்நன் | - |
| 30 | - | - | - | - | வண்டு | - | சீறியாழ் | - | - | - | மகிழ்நன் | - |
| 40 | - | - | - | - | - | - | - | - | - | - | ஊரன் | - |
| 50 | - | - | - | - | - | - | - | - | - | - | - | - |
| 60 | - | சோறு வரால் மீன் | எருமை | - | - | உழவுத் தொழில் | - | - | - | - | உழவன் | - |
| 70 | - | கொளிறுமீன் | - | - | குருகு | - | - | - | - | - | மகிழ்நன் | - |
| 80 | - | பால் | எருமை கன்று | - | - | நிரை மேய்த்தல் | - | தார் மாலை | - | - | - | - |
| 90 | - | - | - | - | - | வண்ணான் | - | மாலை | - | - | - | - |
| 100 | - | - | - | - | - | - | - | ஆம்பல் | - | - | ஊரன் | - |

## அட்டவணை - நான்கு
## நெய்தல் திணைப்பாடல்களில் கருப்பொருட்கள்

| பா எண் | தெய்வம் | உணவு | விலங்கு | மரம் | பறவை | தொழில் | யாழ் | பூ | நீர் | பறை | தலைமகன் | தலைமகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | - | மீன் | - | புன்னை | நாரை | மீன்பிடித்தல் உப்பு விளைத்தல் | - | புன்னை | கடல் | - | துறைவன் | - |
| 11 | - | - | குதிரை நண்டு | - | - | - | - | - | - | - | - | - |
| 15 | - | - | - | - | - | - | - | - | - | - | சேர்ப்பன் | - |
| 16 | - | மீன் | - | - | - | மீன்பிடித்தல் | - | தாழம்பூ | பொய்கை | - | - | - |
| 19 | - | இறாமீன் சுறாமீன் | குதிரை | தாழை | - | மீன்பிடித்தல் | - | நெய்தல் பூ | கடல் | - | சேர்ப்பன் | - |
| 27 | - | இறாமீன் | - | - | வண்டு குருகு | - | - | புன்னை | - | - | - | - |
| 31 | - | இறால் | - | புன்னை | காக்கை குருகு | - | - | - | - | - | சேர்ப்பன் | - |
| 35 | - | - | அலவன் | நாவல் | தும்பி நாரை | - | - | - | - | - | - | - |
| 38 | - | மீன்கள் | - | பனை மரம் | - | மீன்பிடித்தல் | - | - | - | - | - | - |
| 45 | - | சுறாமீன் | - | கொடி | காகம் | மீன்பிடித்தல் | - | - | - | - | - | - |
| 49 | - | சுறாமீன் | - | புன்னை தாழை | காகம் | மீன்பிடித்தல் | - | புன்னை | - | - | சேர்ப்பன் | - |
| 54 | - | - | - | ஞாழல் நுண்டல் | குருகு | - | - | - | - | - | - | - |
| 58 | - | - | குதிரை | - | குருவி | - | - | - | - | செவ் வரிப் பறை | சேர்ப்பன் | - |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 63 | - | மீன் | இவுளி (குதிரை) | புன்னை | - | மீன்பிடித்தல் | - | புன்னை | - | - | சேர்ப்பன் | - |
| 67 | - | இறாமீன் | - | புன்னை | குருகு | .மீன்பிடித்தல் | - | புன்னை | - | - | - | - |
| 72 | - | - | - | - | - | - | - | - | - | - | - | - |
| 74 | - | மீன் | - | ஞாழல் புன்னை கண்டல் | குருகு | மீன்பிடித்தல் | - | புன்னை பூ | - | - | சேர்ப்பன் | - |
| 78 | - | சுறாமீன் உப்பு | கலிமா | புன்னை நெய்தல் தாழை | - | உப்பு விளைவித்தல் | - | புன்னை | கடல் | - | சேர்ப்பன் | - |
| 87 | - | - | - | நெல்லி புன்னை | - | மீன்பிடித்தல் | - | புன்னை | - | - | - | - |
| 91 | - | மீன் | குதிரை | புன்னை | நாரை | மீன்பிடித்தல் | - | புன்னை | கடல் | - | சேர்ப்பன் | - |
| 94 | - | - | - | புன்னை | - | - | - | புன்னை | கடல் | - | சேர்ப்பன் | - |
| 96 | - | - | - | ஞாழல் புன்னை நெய்தல் | - | - | - | நெய்தல் பூ புன்னை | கடல் | - | - | - |

## அட்டவணை - ஐந்து
## பாலைத் திணைப்பாடல்களில் கருப்பொருட்கள்

| பா எண் | தெய்வம் | உணவு | விலங்கு | மரம் | பறவை | தொழில் | யாழ் | பூ | நீர் | பறை | தலைமகள் | தலைமகன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | - | - | புலி | ஈத்த மரம், மரல் கொடி | - | - | - | - | - | - | - | - |
| 3 | - | - | - | வேப்ப மரம் நெல்லி மரம் | பருந்து | கள்வர் | - | - | - | - | - | - |
| 7 | - | - | யானை | சந்தன மரம் | - | - | - | - | அருவி சுனை கான்யாறு | - | - | - |
| 9 | - | - | - | - | குயில் | - | - | - | - | - | - | - |
| 10 | - | - | யானை | - | - | - | - | - | - | - | - | - |
| 12 | - | விளம்பழம் | - | விளா மரம் | - | நிரை மேய்த்தல் | - | - | - | - | - | - |
| 14 | - | - | களிறு, பிடி, பாந்தள் | - | - | - | - | காந்தள் | - | - | - | - |
| 18 | - | - | யானை | - | - | - | - | - | அருவி | - | - | - |
| 24 | - | விளங்கனி | உடும்பு | விளா மரம் | - | - | - | - | - | - | - | - |
| 26 | - | நெல்அரிசி | - | பலா மரம் | - | - | - | - | - | - | - | - |
| 28 | - | - | - | மூங்கில் | - | - | - | வேங்கை மலர் | அருவி | - | - | - |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 29 | - | - | புலி | - | - | - | - | காந்தள் | - | - | - | - |
| 33 | - | - | - | - | - | கள்வர் | - | - | - | - | - | - |
| 37 | - | - | கலைமான், ஆன், நாகம் | - | - | - | - | குவளை | - | - | - | - |
| 41 | - | உணவு | - | பருத்தி மரம் | - | - | - | - | கூவல் | - | - | - |
| 43 | - | மரை உணவு | செந்நாய் யானை | - | - | - | - | - | - | - | - | - |
| 46 | - | - | - | கொன்றை மூங்கில் | - | - | - | - | - | - | - | - |
| 48 | - | - | - | கோங்கம் | - | - | - | கோங்கம் மலர் | - | - | - | - |
| 52 | - | - | - | - | - | - | - | அதிரல் பாதிரி | - | - | - | - |
| 56 | - | - | - | குராமரம் | வண்டு | - | - | - | - | - | - | - |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 62 | - | - | யானை | மூங்கில் | - | - | - | - | - | - | - | - |
| 66 | - | - | - | - | புறா | - | - | - | - | - | - | - |
| 71 | - | - | - | - | புறா | - | - | - | - | - | இகுளை | - |
| 73 | - | நெல்அரிசி | - | - | அன்னம் | - | - | செம் முருக்கு | - | - | - | - |
| 76 | - | - | - | ஆலமரம் புன்னை | - | - | - | புன்னை மலர் | - | - | - | - |
| 79 | - | - | - | ஈங்கை மரம் | - | - | - | ஈங்கை | - | - | - | - |
| 84 | - | - | மான் | ஓமை மரம் | - | - | - | - | - | - | - | - |
| 86 | - | - | - | - | - | - | - | கோங்கம் பகன்றை ஈங்கை | - | - | - | - |
| 92 | - | - | வழலை (பாம்பு) பிடி, களிறு நிரை | மரல் கொடி | - | வேட்டைத் தொழில் | - | - | கேணி நீர் | - | - | - |